# Let's make the world a sweeter place to live in.



I'm planting a Tulsi tree. Hope it grows into a B-I-I-G one.



Lovable, blind Chacha Kunwar. He's been my parents' guide. The least I can do is help him cross safely.



Aha! This time Dad's got the flu and Mum's told me to give him a dose of medicine.



Gangu Bai has coolly taken the day off. Leaving Radha Mausi and me in a soapy mess.



Before that rich glutton of a Raju snatches my Kaju Barfi, let me give it to poor Smita.



Naughty Timmy has got himself hurt. Now this lil' Doc will set him right.



I'm helping Uncle Rajeev with the car repairs. Though Mum said "I'll be a spanner in the works".



With Chandra, my maths teacher, numbers are fun. Time I gave her a dozen smiling roses.




Years and years of sweet success

TA-FI



# அம்புலிமாமா

## ஆகஸ்ட் 1996



## பொருளடக்கம்


| | | |
|---|---|---|
| தலையங்கம் | ... | 7 |
| செய்திகளும் தகவல்களும்: புதிய பிரதம மந்திரி | ... | 9 |
| அறிவுரையை ஏற்றான்! | ... | 10 |
| ரூபதரனின் பயணங்கள் | ... | 17 |
| செய்திகளில் சிறுவர்கள் | ... | 24 |
| நம்பிக்கை போயிற்று! | ... | 25 |
| வல்லவனுக்கு வல்லவன்! | ... | 31 |
| கடற்கரையோரப் பயணங்கள்–9 | ... | 33 |
| பசியும் பணமும் | ... | 37 |
| பொன்மயமான பொழுதுகள் | ... | 41 |
| மகாபாரதம் | ... | 45 |
| அம்புலிமாமா அனுபந்தம்–93 | ... | 53 |
| பொன்மயமான பொழுதுகள் நெ. 2 விடைகள் | ... | 56 |
| நானே சமைக்கிறேன்! | ... | 57 |
| அண்ணாமலையின் அபார மூளை! | ... | 62 |
| நல்லது செய்தால்...! | ... | 63 |
| போட்டோ வாக்கியப் போட்டி | ... | 66 |




**தனிப்பிரதி ரூ.6.00**

**வருட சந்தா ரூ.72.00**

# JUST RELEASED

The first set of **Chandamama Books,** splendid in their content, illustrations, and production, is now ready.




Rs. 30/-




Rs. 40/-




Rs. 30/-




Rs. 30/-




Rs. 25/-




Rs. 30/-

Discount for members of
**Chandamama Young Scholars Club.**

For details, write to :



**CHANDAMAMA BOOKS**
Chandamama Bldgs.
Vadapalani, Madras - 600 026.




# அம்புலிமாமா

நிறுவனர்: **'சக்கரபாணி'** நிர்வாக ஆசிரியர்: **நாகிரெட்டி**

## சீரான கல்வித் திட்டம் தேவை!



பெற்றோர்கள் தம் குழந்தைகளை குறிப்பிட்ட பள்ளிகளில் சேர்க்கப் படாத பாடுபடுவதைக் காண்கிறோம். இதே சமயம் சில பள்ளி ஆசிர்யர்கள் தம் பள்ளியில் சேர்க்க மாணவர்களைத் தேடிச் செல்வதையும் பார்க்கிறோம். இது வேடிக்கையாக இல்லையா?

ஒரு வகுப்பில் 32 மாணவர்கள் இருக்கலாம். அது 50 ஆனால் இரு பிரிவுகளாக்கப்பட வேண்டியதே. மாணவர் தொகை 30ன் மடங்களாகப் பெருகினால் வகுப்பின் பிரிவுகள் அதிகமாக்கப்பட்டு ஆசிரியர்களும் அதிகரிக்கப்பட வேண்டும். இந்த நிலை தற்போது இல்லாததால் ஆசிரியர்களும் அலைகிறார்கள். பெற்றோர்களும் அவதிக்கு ஆளாகிறார்கள்.

இந்த நிலைக்கு பெரும்பாலும் பெற்றோர்களே காரணம். இவர்கள் ஆங்கிலம் வாயிலாக எல்லாப் பாடங்களையும் கற்பிக் கும் தனியார் பள்ளிகளையே நாடுகிறார்கள். இதை நம் நாட்டு நகரங்களில் தற்போது காண்கிறோம்.

தனியார் பள்ளியோ, அரசுப் பள்ளியோ எதானாலும் ஒரே சீரான கல்வித் திட்டத்தோடு செயல்பட்டாலே எல்லோருக்கும் தரமான கல்வி கிடைக்கும். இதைத்தான் இப்போது செய்ய வேண்டும்.

**மதிமுகம்: 99** **ஆகஸ்டு 1996** **புன்னகை: 2**

**தனிப்பிரதி: ரூ.6.00** **வருட சந்தா: ரூ.72.00**





चन्दामामा
चांदोबा
అంబులిమామ
CHANDAMAMA
అంబులిమామా
चन्दामामा
చందమామ

செய்திகளும் தகவல்களும்

# புதிய பிரதம மந்திரி

நமது நாடாளும் மன்றத்தின் 543 இடங்களுக்குக் கடந்த ஏப்ரல், மே மாதங்களில் தேர்தல்கள் நடந்தன. கூடவே அஸ்ஸாம், மேற்கு வங்கம், ஹரியானா, கேரளம், தமிழ் நாடு ஆகிய மாநிலங்களுக்கும் மத்திய அரசின் கீழுள்ள பாண்டிச்சேரிக்கும் 914 இடங்களுக்கான சட்டமன்றத் தேர்தல்கள் நடைபெற்றன.



பொதுவாகத் தேர்தல்கள் அமைதியாகவே நடைபெற்றன. ஓரிரு இடங்களில் சில சச்சரவுகள் ஏற்பட்டாலும் அவை ஒன்றும் பெரிதாகி விடவில்லை. நான்கு மாநிலங்களிலும் பாண்டிச்சேரியிலும் ஆளும் கட்சி தோற்றது. மேற்கு வங்கத்தில் மட்டும் இடதுசாரிக் கூட்டணியே மீண்டும் ஆட்சிக்கு வந்துள்ளது.

மத்திய அரசும் மாறியது. ஆளும் கட்சியாக இருந்த இந்திய தேசியக் காங்கிரசிற்கு 140 இடங்களே கிடைத்தன. பாரதீய ஜனதா கட்சி காங்கிரசை விட 21 இடங்கள் அதிகம் பெற்றது. ஆயினும் அரசு அமைக்க அதற்குப் போதிய இடங்கள் கிடைக்கவில்லை. எந்த ஒரு கட்சியும் பெரும்பான்மைக்கான இடங்களைப் பெற்றிருக்கவில்லை.

இந்நிலையில் 46 இடங்களைக் கைப்பற்றிய ஜனதாதளம் 44 இடங்களைப் பெற்ற இரு சாரிக் கம்யூனிஸ்ட்களையும் தன்னோடு கூட்டணி சேர அழைத்து 153 உறுப்பினர்கள் கொண்ட 17 மாநிலக் கட்சிகளையும் சுயேச்சை உறுப்பினர்களையும் சேர்த்து ஐக்கிய முன்னணியை அமைத்தது. இக்கூட்டணி தனக்கு அரசு அமைக்க உரிமை உள்ளது எனக் கூறியது.

ஆனால் குடியரசுத் தலைவர் சங்கர் தயாள் சர்மா எல்லாக் கட்சிகளிலும் அதிக இடம் பெற்ற பாரதீய ஜனதாக் கட்சியை அரசு அமைக்க அதன் தலைவர் அடல் பீஹாரி வாஜ்பாயை அழைத்து 15 தினங்களுள் அக்கட்சி தன் பெரும்பான்மையை நிரூபிக்க வேண்டும் என்று கூறி அரசு அமைக்கச் சொன்னார். மே 15ந்தில் வாஜ் பாயியின் மந்திரி சபை பொறுப் பேற்றது.

அது தனக்குப் பெரும்பான்மை கிடைக்கவில்லை என்று கண்டு பதிமூன்றாவது நாள் பதவி விட்டு விலகியது. அடுத்து அதிகப்படி இடங்களைப் பெற்ற காங்கிரஸ் தான் அரசு அமைக்கப் போவதில்லை என்று கூறி ஐக்கிய முன்னணிக்குத்தான் ஆதரவு அளிப்பதாகவும் குடியரசுத் தலைவருக்குத் தெரிவித்தது. ஐக்கிய முன்னணியால் அரசு அமைக்க முடியும் என உறுதி செய்து கொண்ட பின் குடியரசுத் தலைவர் ஐக்கிய முன்னணித் தலைவர் தேவே கௌடாவை அரசு அமைக்க அழைத்தார்.

தேவே கௌடா 1933ல் கர்நாடகத்தில் ஒரு கிராமத்தில் விவசாயக் குடும்பத்தில் பிறந்தவர். சிவில் என்ஜினியரிங் பட்டயம் பெற்று சிறிது காலம் சிவில் கான்ட்ராக்டராகவும் இருந்தார். பின்னர் அரசியலில் ஈடு பட்டு 1962ல் காங்கிரஸ் கட்சி மாநில சட்ட மன்ற உறுப்பினர் ஆனார். 1983ல் கர்நாடகத்தில் அமைந்த காங்கிரஸ் அல்லாத ஆட்சியில் அமைச்சராக இருந்தார். 1991ல் சமாஜ் வாதிக் கட்சி வேட்பாளராகப் போட்டியிட்டு வென்று நாடாளும் மன்ற உறுப்பினர் ஆனார். 1994ல் நடந்த தேர்தலின் போது ஜனதா தளத் தலைவராகி கர்நாடக மாநிலத்தின் முதலமைச்சரானார். அப்பதவியை 17 மாதங்கள் வகித்து இப்போது ஐக்கிய முன்னணியின் தலைவராகி இந்தியப் பிரதம மந்திரிப் பதவியை ஏற்றிருக்கிறார்.



# அறிவுரையை ஏற்றான்!

கொடியூரில் கோதண்டன் பெரும் பணக்காரன். விவசாயம் செய்து பல வயல்களையும் வீடுகளையும் வாங்கிப் போட்டான். அவன் எந்த வேலையைச் செய்தாலும் அது வெற்றிகரமாக முடிந்து அவனுக்கு லாபத்தையே தந்தது. இதனால் ஊரில் அவனுக்கு நல்ல மரியாதை இருந்தது.

அவ்வூருக்குப் பசுபதி என்ற பண்டிதர் வந்தார். அவர் நல்ல அறிவாளி. நன்கு பேசி எல்லோரையும் கவரும் திறன் பெற்றவர். அவ்வூருக்கு வந்த சில நாட்களிலேயே அவர் ஊராரின் நன்மதிப்பைப் பெற்றார். ஆனால் அவ்வூருக்கு வந்ததிலிருந்து அவர் கோதண்டனைக் காணச் செல்லவில்லை.

கோதண்டன் இதனால் பசுபதி மீது கோபம் கொண்டான். ஒருநாள் அவன் தன் வேலையாளை அனுப்பி பசுபதியை அழைத்து வரச் சொன்னான். பசுபதியும் அவர் வீட்டிற்கு வந்து ''நானே உங்களைப் பார்க்க நினைத்தேன். நீங்களே என்னை வரவழைத்து விட்டீர்கள். என்னை அழைத்த காரணம் என்னவோ?'' என்று கேட்டான்.

கோதண்டனும் ''நீங்கள் ஊருக்கும் புதிது. பண்டிதர். பண வசதி இல்லாதவர். உங்களுக்கும் பணமுடை என்று கேள்விப்பட்டேன். உங்களுக்குப் பணம் கொடுத்து உதவவே உங்களை வரவழைத்தேன்'' என்றான்.

பசுபதியும் ''மிக்க நன்றி. நான் யாரிடமிருந்தும் பண உதவி பெற விரும்பவில்லை. ஆனால் நம் சந்திப்பு இப்போது நம்மை நண்பர்களாக்கி விட்டது. அதனால் நான் மகிழ்ச்சி அடைகிறேன்'' என்று கூறிவிட்டு விடை பெற்றுக் கொண்டு சென்றார்.

கோதண்டன் அவர் கூறியதை ரசிக்கவில்லை. ஒரு ஏழைப் பண்டிதருக்கு இவ்வளவு கர்வமா என்று எண்ணி ஆத்திரம் கொண்டான். பசுபதியோ முதலில் தன் குடும்பத்தோடு

—சிவனார் செல்வன்—

வந்து ஒரு வாடகை வீட்டிலிருந்தார் மறு வருடம் ஒரு வீட்டை வாங்கினார். அதற்கு அடுத்த வருடம் இரு வயல்களை வாங்கினார். இப்படியே சில வருடங்களில் சொத்து சேர்த்து அவர் கோதண்டனுக்குச் சமமாக வந்து விட்டார்.

பசுபதி கோதண்டனைச் சந்தித்த போதெல்லாம் தனக்கு எங்கு எவ்வளவு சன்மானம் கிடைத்தது என்ற விவரங்களைக்கூறி வந்தார். கோதண்டன் அதையெல்லாம் கேட்டுக் கொண்டாலும் அதற்காகத் தன் மகிழ்ச்சியை வெளிக் காட்டவில்லை. ஏழைப் பண்டிதர் பணக்காரராகி தனக்குச் சமமாக வந்து விட்டாரே என்று எண்ணிப் பொறாமை கொண்டான்.

பசுபதி வெளியூர்களுக்குப் போய்ப் பண்டிதர்கள் சபைகளிலும் இலக்கிய மன்றங்களிலும் தன் திறமையை வெளிப்படுத்திப் பாராட்டுகளையும் பரிசுகளையும் பெற்று வந்தார். இதனால் அவருக்குப் பணமும் புகழும் அதிகரித்துக் கொண்டே வந்தது. ஆனாலும் அவர் தற்பெருமை கொள்ளாமல் அடக்கமாகவே இருந்து வந்தார். இதனால் ஊரார் அவரைப் பலவாறு புகழ்ந்தும் அவருக்கு ஆயிரக் கணக்கில் வருமானம் வருவதாகவும் கூறி வரலானார்கள்.

கோதண்டத்திடம் யாராவது பசுபதியைப் பற்றிக் கூறினால் அவன் ''பூ! என்ன பிரமாத வருமானம் கிடைத்திருக்கிறது? என் வருமானத்தில் அரைக் கால் பங்கு கூட இல்லையே'' எனக் கூறியதோடு பசுபதியைப் பற்றி இல்லாததும் பொல்லாததும் கூறி வந்



தான். பசுபதி அது பற்றிக் கவலைப் படவில்லை.

ஒருநாள் மன்னனின் தூதன் கொடியூருக்கு வந்தான். அவன் பசுபதியைக் கண்டு ''தாங்கள் மாபெரும் பண்டிதர் என்று மன்னர் கேள்விப்பட்டதால் தங்களை கௌரவிக்கப் போகிறார். அதற்காகத் தங்களைத் தலைநகருக்கு அழைத்துச் செல்ல இன்னும் ஒரு வாரத்தில் இங்கு தங்கப் பல்லக்கு வரும். அதில் அமர்ந்து தலைநகருக்கு வந்து மன்னர் செய்யும் மரியாதையை ஏற்க வேண்டும்'' என்று கூறிவிட்டுச் சொன்றான்.

இந்தச் செய்தி ஊரெங்கும் பரவியது. பசுபதியே இதைக் கோதண்டனிடம் கூறவே அவன் ''இப்போது எனக்கு ஒரே தலைவலி. இதையெல்லாம் கேட்டுக் கொண்டிருக்க முடி



யாது'' என்று கூறிவீட்டிற்குள் போய் விட்டான். அதுகண்டு அவர் ஆச்சரியப்பட்டு ''இவர் சுபாவம் தெரிந்தது தான்'' என்று எண்ணிக் கொண்டார்.

ஒரு வாரமாயிற்று தங்கப் பல்லக்கு வந்தது. அதில் அமர்ந்து பசுபதி தலைநகருக்குச் கிளம்பினார். ஊரார் வழியனுப்ப ஊர் எல்லை வரை பல்லக்கின் பின் சென்றார்கள். ஆனால் கோதண்டன் மட்டும் செல்லவில்லை.

தலைநகரில் நிறைந்த சபையில் மன்னன் பசுபதிக்குப் பொன்னாடை போர்த்திப் பணமுடிப்பு அளித்தான். அவன் ''ஐயா. தங்களது ஊரில் கிராம அதிகாரி என்று ஒருவர் இல்லை. அதனால் தங்களையே கொடியூரின் கிராம அதிகாரியாக நியமிக்கிறேன்'' என்றான்.

பசுபதியும் ''அரசே! இலக்கிய அறிவு வேறு, நிர்வாகத் திறமை வேறு இலக்கியவாதி என்பவன் நன்கு நிர்வாகத்தை நடத்துவான் எனக் கூற முடியாது. எனவே எனக்கு இந்த கிராம அதிகாரி பதவி வேண்டாம். இதனை எங்கள் ஊர் பிரமுகர் கோதண்டனுக்குத் கொடுங்கள். அவரது நிர்வாகம் சிறப்பாக இருக்கும்'' என்றான். மன்னனும் சற்று யோசித்து ''சரி. நீங்கள் கூறியபடியே கோதண்டனை உங்கள் ஊர் கிராம அதிகாரியாக நியமித்து அதற்கான நியமனக் கடிதத்தை உங்களிடம் கொடுக்கிறேன். நீங்கள் அதனை அவனிடம் சேர்த்து விடுங்கள்'' என்றான்.

பசுபதியும் அதையும் வாங்கிக் கொண்டு ஊரை அடைந்தார். அவர் கோதண்டத்திடம் மன்னனின் உத்தரவைக் கொடுத்து நடந்ததைக் கூறினார். ஊராருக்கும் விஷயம் தெரிந்தது. அவர்களும் ''இந்தக் கோதண்டனை விட பசுபதி கிராம அதிகாரியாக இருந்தாலே எல்லோருக்கும் நல்லது'' என்றார்கள். கோதண்டனும் முதல் தடவையாகப் பசுபதியிடம் சிரித்துப் பேசி மன்னனின் உத்தரவை வாங்கிக் கொண்டான்.

மன்னன் பசுபதியின் இலக்கிய அறிவைக் கண்டு வியந்து அடிக்கடி அவரைத் தலை நகருக்கு அழைக்கலானான். அச்சமயங்களில் ஊரின் பிரச்னைகளை மன்னனிடம் கூறவே மன்னனும் அவற்றை உடனுக்குடன் கவனித்துத் தீர்த்து வரலானான்.

இதைப்பற்றி பசுபதி கோதண்டனிடம் கூறவே ''இதோ பாரும் பண்டிதரே! இந்த ஊரின் பிரச்னைகளை நீங்கள் ஏன் மன்னரிடம் கூறவேண்டும்?

கிராம அதிகாரியான நான் எதற்கு இருக்கிறேன்? இன்னொரு முறை இம்மாதிரி நடந்தால் நான் இப்பதவியை விட்டு விலகி விடுவேன்'' என்றான்.

அப்போது பசுபதி ''ஊருக்கு யார் நல்லது செய்தாலும் வரவேற்கத் தக்கது தானே. அதை நீங்கள் மகிழ்ச்சியுடன் வரவேற்கலாமே. இதற்கு நான் பயன்பட்டால் எவ்விதத் தவறும் இல்லையே'' என்றார்.

ஆனால் கோதண்டனோ ''நான் யார்? இந்த கிராமத்தின் அதிகாரி. இந்த கிராமத்தின் நன்மைகள் எவை என்று எனக்குத் தெரியும் அவற்றை நான் கவனித்துக் கொள்கிறேன். நீங்கள் மன்னரிடம் பேசுவதானால் இலக்கியம் பற்றிப் பேசுங்கள். அதற்கு நான் தடை செய்ய மாட்டேன். ஆனால் கிராம நிர்வாகம் பற்றி மன்னரிடம் நீங்கள் பேசக் கூடாது இது என் உத்தரவு'' என்று கடுகடுப்புடன் கூறினான்.

பதவியினால் அவனுக்கு மமதை ஏற்பட்டு விட்டது என்பதை பசுபதி புரிந்து கொண்டார். ஒரு மனிதன் பதவியில் அமர்ந்து விட்டால் அவனுக்குத் தலைகால் புரியாமல் போவது இயல்புதானே! கோதண்டன் பசுபதியைத் தன் விரோதியாகக் கருதலானான். இதனால் கோதண்டன் பசுபதியின் வீட்டு வரியைப் பன்மடங்கு அதிகரித்தான். நீர்வரி, நிலவரி முதலியவற்றையும் அதுபோல உயர்த்தினான். பசுபதிக்கு அவன் பல சில்லறைத் தொந்தரவு கொடுக்கலானான்.

இவற்றையெல்லாம் பசுபதி ஓரிரு மாதங்களுக்குப் பொறுத்துப் பார்த்தார். மேலும் பொறுக்க முடியாது என்ற நிலை ஏற்படவே அவர் மன்னனிடம் முறையிட்டார். மன்னனும் கோதண்டனைக் கடுமையாகக் கண்டித்தான். இதனால் பசுபதி மீது கோதண்டனின் கோபமும் ஆத்திர





கடி போய் மன்னனைக் காணலா னான். அவன் பசுபதியை முன்னுக்கு வரவிடக் கூடாது என்ற நோக்கத் தோடு''பண்டிதர்களைவிடப்பாமரர் களின் தேவைகள்தான் மிக அதிகம். எனவே இனி நீங்கள் பண்டிதர்களை ஆதரிக்காமல் அவர்களுக்குக் கொடுக் கும் பணத்தை ஏழைகளுக்காக செல விடுங்கள்'' என்று யோசனை கூறி னான்.

மன்னனும் அந்த யோசனையை ஏற்று பண்டிதர்களுக்கும் கவிஞர் களுக்கும் கொடுத்து வந்த மாதாந்திரப் பணத்தை நிறுத்தி விட்டான். இத னால் பசுபதிக்கு மன்னனிடமிருந்து மாதா மாதம் கிடைத்து வந்த பணம் கிடைக்காமல் போயிற்று, பசுபதி பிற ருக்கு இரங்குபவர். அதனால் தன்னி டம் உதவி கேட்டு வந்தவர்களுக்குத் தாராளமாகப் பணம் கொடுத்து வந் தார். அதனால் அவரிடமிருந்த பணம் விரைவில் கரைந்து போயிற்று.

அப்போது சிலர் பசுபதியிடம் ''நீங்கள் உங்கள் பிரச்னையை பவிஷ் யானந்தரிடம் கூறினால் அவர் ஏதா வது வழி செய்வார்'' என்றார்கள். ஆனால் அவர் அவரிடம் போக மறுத்து மன்னனைக் காணத் தலை நகருக்குச் சென்றார். ஆனால் அங்கு அரண்மனைக் காவலாளிகள் ''மன் னர் இப்போதெல்லாம் பண்டிதர் களையும் கவிஞர்களையும் பார்க்க விரும்புவதில்லை. அதனால் அவரை நீங்கள் பார்க்க முடியாது'' என்று கூறி விட்டார்கள்.

அதன்பிறகு பசுபதி அமைச்சரைக் கண்டார். அவரும் ''நீங்கள் வந்து என்னைக் காண்பது ஆச்சரியமாக

மும் மேலும் அதிகரித்தது.

இச்சமயம் அந்த ஊருக்கு பவிஷ் யானந்தர் என்ற யோகி வந்தார். அவர் மிகவும் சக்தி வாய்ந்தவர் என்று அறிந்து கோதண்டன் அவரைத் தன் வீட்டில் தங்க வைத்தான். ஊரிலுள்ள யாவரும் அவரை தரிசித்துத் தம் பிரச்னைகளைக்கூறி அவற்றிற்குதீர்வு கண்டு வந்தார்கள். கோதண்டனின் வீட்டில் அவர் தங்கி இருந்ததால் அவனால் அவரை அடிக்கடிக் காண முடிந்தது.

இந்த வாய்ப்பைப் பயன்படுத் திக் கொண்டு அவன் யோகியிடம் ''சுவாமி! இந்நாட்டு மன்னன் நான் சொல்கிறபடி கேட்டு நடக்க அருள் புரிய வேண்டும்'' என்று வேண்டி னான். அவரும் அவ்வாறே நடக்கும் என்று கூறினார். கோதண்டன் அடிக்

இருக்கிறது'' எனவே பசுபதியும் ''நான் ஒன்றை எழுதிக் கொடுக்கிறேன். அதை நான் எழுதியதாக நீங்கள் மன்னரிடம் கூறாமல் நீங்களே எழுதியதாகக் கூறிப் படித்துக் காட்டுங்கள்'' என வேண்டினார். அமைச்சரும் அதை எடுத்துப் போய் மன்னரிடம் ''பண்டிதர்களால் சாதாரண மக்களுக்கு எவ்வளவு பயன் உண்டோ அவ்வளவுப் பயன் பண்டிதர்களை ஆதரிப்பதால் அரசாங்கத்திற்கு உண்டு'' என்று எழுதப்பட்டிருந்ததைப் படித்துக் காட்டினார்.

அதைக் கேட்ட மன்னனுக்குத் தன் தவறு என்ன என்பது புரிந்தது. உடனேயே அவன் ஒவ்வொரு ஊரிலும் ஒரு சிறந்த பண்டிதரை அரசாங்கப் பண்டிதராக நியமிப்பது என்ற உத்தரவைப் பிறப்பித்து அந்தந்த கிராம அதிகாரிகளைத் தம் ஊரின் சிறந்த பண்டிதரின் பெயரை எழுதி அனுப்பக் கட்டளை பிறப்பித்தான்.

இந்த உத்தரவு கிடைத்ததும் கோதண்டன் தனக்கு வேண்டிய ஒருவனின் பெயரை எழுதி மன்னனுக்கு அனுப்பினான். பசுபதி தம்மைப் பற்றிய விவரங்களை எழுதித் தாமே நேராக மன்னனுக்கு அனுப்பினார். அப்போது சிலர் அவரிடம் ''மன்னருக்கு உங்களைப் பற்றி நன்கு தெரியும். ஆனால் தங்களுக்கு எதிராக இப்போது ஒரு துஷ்ட சக்தி செயல்படுவதாகத் தெரிகிறது. எனவே நீங்கள் பவிஷ்யானந்தரைப் பார்த்து உங்கள் விருப்பத்தைக் கூறினால் அவர் அதைக் கண்டிப்பாக நிறைவேற்றி வைப்பார்'' என்றனர்.

பசுபதியும் பவிஷ்யானந்தரைக்



கண்டு தன் பிரச்னையைக் கூறினார். அவரும் ''உங்கள் விருப்பம் நிறைவேறும்'' என்றார். அப்போது அங்கிருந்த கோதண்டன் ''சுவாமி! இவனுக்குத் தங்கள் மீது நம்பிக்கை இல்லை. இவன் கோரிக்கை நிறைவேறும் என்கிறீர்களே'' என்றான். யோகியும் ''நாம் விருப்பு, வெறுப்பு என்பது இல்லாமல் எல்லோரையும் சமமாக பார்க்கிறோம். எனக்கு இவரும் நீயும் சமமே'' என்றார்.

பசுபதி யோகியின் ஆசி கிடைத்ததும் அவரை வணங்கி விடை பெற்றுக் கொண்டு சென்றார். அப்போது கோதண்டன் ''சுவாமி! என் விருப்பம் இந்தப் பசுபதிக்கு இந்த கிராமப் பண்டிதர் பதவி கிடைக்கக் கூடாது என்பதே. என் விருப்பம் நிறை வேற அருள் புரியுங்கள்'' என்றான். யோகி

யும் ''உன் விருப்பம் நிறைவேறும்'' என்றார்.

அப்போது கோதண்டன் ''ஐயா! நீங்கள் பசுபதியிடம் அவன் விருப்பம் நிறைவேறும் என்று கூறினீர்கள். என்னிடம் என் விருப்பம் நிறைவேறும் என்றீர்கள். எங்கள் இருவர் விருப்பங்களும் ஒன்றுக்கு மற்றது நேர் எதிரானது ஆயிற்றே. உங்கள் வாக்கு எப்படிப் பலிக்கும்?'' என்று கேட்டான். யோகியும் ''யாராவது தம் விருப்பம் நிறைவேறுமா என்று கேட்டால் அவர்களது விருப்பம் நிறைவேறும் என்றே கூறுவேன். நீங்கள் தம் விருப்பம் நிறைவேற வேண்டுமென்று கேட்டீர்கள். இருவரது விருப்பங்கள் நிறைவேறும் என்றேன். இவற்றில் ஒரு விருப்பம்தான் நிறைவேறும். மற்றவருக்கு அவரது வாழ்வில் சரிவு ஏற்படும்'' என்றார்.

அது கேட்டு கோதண்டன் திருப்தி அடைந்தான். பசுபதிக்குத் கண்டிப்பாகப் பண்டிதர் பதவி கிடைக்காது என்றும் தான் விரும்பியது போல அவருக்கு அப்பதவி கிடைக்காமல் போய் வாழ்க்கையில் அவருக்கு வீழ்ச்சிதான் என்று எண்ணி மகிழ்ந்தான்.

ஒருவாரம் கழிந்தது. பசுபதிக்கு அரசாங்கப் பண்டிதர் பதவி கிடைத்து விட்டது என்ற செய்தி கோதண்டனுக்குக் கிடைத்தது. அப்போது அவன் பயந்து போய் ஓடி யோகியைக் கண்டான். அவரிடம் ''சுவாமி! என் விருப்பம் நிறைவேறவில்லையே. இது ஏன்?'' என்று கேட்டான்.

யோகியும் ''ஒருவன் தன் நலனுக்காகக் கேட்கும் விருப்பம் நிறைவேறும் அவன் பிறருக்குக் கெடுதல் விளைய வேண்டும் என்று நினைத்தால் அது நிறைவேறாது. பசுபதி தான் நன்மை அடைய விரும்பினார். அது நடந்தது. நீயோ அவனுக்கு நல்லது நடக்கக் கூடாது என விரும்பினாய். அது நடக்கவில்லை. இனி யாவது நீ யாருக்கும் கெடுதல் செய்ய நினைக்காதே அப்படி நினைத்தால் உன் வாழ்வில் உனக்கு வீழ்ச்சியே ஏற்படும். இது என் அறிவுரை மட்டுமல்ல எச்சரிக்கையும் கூட'' என்றார்.

கோதண்டன் அன்றே பசுபதியை வெறுப்பதை விட்டு அவருடன் நட்புறவு கொண்டு வாழ்ந்து வாழ்வில் சிறந்து விளங்கினான்.






# 13

(ரூபதரனைப் பற்றி சரியான தகவல் எதுவும் இல்லாததால் அவன் இறந்து விட்டதாகக் கூறி பல அரசகுமாரர்கள் அவன் அரண்மனைக்கு வந்து இருந்து கொண்டு அவன் மனைவி பத்மமுகி தம்முள் ஒருவரை மணந்து கொள்ள வேண்டுமென்று வற்புறுத்தினார்கள். இது கண்டு பத்மமுகியும் அவளது மகன் தீரமதியும் வேதனைப்பட்டார்கள். தீரமதி தன் தந்தையைப் பற்றி அறிய யாரிடம் சொல்லிக் கொள்ளாமல் இதாகாவை விட்டுக் கிளம்பி நவித்யோதனனையும் பிரதாபனையும் கண்டான். அதன் பிறகு-)

இதாகாவில் ரூபதரனின் அரண்மனைக்குள் புகுந்து விட்ட அரசகுமாரர்களின் ஆட்ட பாட்டங்கள் சகிக்க முடியாத அளவிற்குப் போய் விட்டன. அவர்கள் நன்கு உண்டு குடித்துக் கொட்டம் அடித்தார்கள். அவர்கள் தீரமதி இதாகாவை விட்டுச் சென்றது பற்றி அறிந்திருக்கவில்லை.

ஒருநாள் ஒருவன் துர்புத்தியைக் காண வந்து ''தீரமதி எப்போது அயல் நாடுகளிலிருந்து திரும்பி வருவான்? அவன் என் படகை வாங்கிக் கொண்டு விரைவில் திருப்பிக் கொடுத்து விடுவதாக கூறிவிட்டுப் போனான். இப்போது என் படகு எனக்குத் தேவைப் படுகிறது'' என்றான்.

அது கேட்டு துர்புத்தி ஆச்சரியப் பட்டு ''தீரமதி கப்பலில் வெளி நாடுகளுக்குப் போயிருக்கிறானா! அவன் யாருடன் போனான்? எப்போது போனான்? எங்கே போனான்? எல்லாம் விவரமாகச் சொல்'' என்று கேட்டான். அவனும் ''தீரமதி சில வாலிபர்களுடன் கப்பலில் கிளம்பிச் சென்



றான். அவனுடன் சகசன் சென்றிருக்கிறான். அவர்கள் எங்கே போனார்கள் என்பது எனக்குத் தெரியாது'' என்றான்.

துர்புத்தி தன் சகாக்களை எல்லாம் ஒன்று கூட்டி ''கேட்டீர்களா சங்கதியை? இந்த தீரமதி யாருக்கும் தெரியாமல் சிலருடன் கப்பலில் இதிகாவை விட்டுப் போயிருக்கிறானாம். எதற்குப் போனான் என்பது தெரியவில்லையா? தன் தந்தையைப் பற்றி அறிந்து கொள்ளத்தான். அவன் தன் தந்தை உயிருடன் இருக்கிறார் என்ற செய்தியுடன் இங்கு திரும்பி வந்தால் நம்மில் யாராலும் பத்மமுகியை மணக்க முடியாது. அதனால் அவனை நடுக் கடலில் மடக்கிக் கொன்று விட வேண்டும். அதற்காக ஒரு படகையும் சில படகோட்டிகளையும் ஏற்பாடு செய்யுங்கள்'' என்றான்.

அதன் பிறகு துர்புத்தி நான்கு அரச குமாரர்களோடு கலந்து யோசித்து பைலாசிலிருந்து திரும்பி வரும் தீரமதியை எங்கு மறைந்திருந்துத் தாக்கிக் கொல்வது என்று திட்டம் போட்டான். இது பத்மமுகிக்குத் தெரிந்து போயிற்று. அப்போதுதான் அவளுக்கே தீரமதி அயல் நாடுகளுக்குப் போன விஷயம் தெரிந்தது.

அவள் தன் பணியாட்களிடம் ''நீங்கள் இவ்வளவு பேர்கள் இருந்தும் என் மகன் கப்பலேறிப் போன விஷயத்தை யாருமே என்னிடம் சொல்லவில்லையே'' என்று கூறி வருத்தப்பட்டாள். பணியாட்களும் தங்களுக்கும் அது பற்றி எதுவும் தெரியாது என்றும் அதைக் கேட்டு ஆச்சரியப்படுவதாகவும் கூறினார்கள்.

பத்மமுகியின் வருத்தத்தைக் கண்டு கயவர்களான அரசகுமாரர்கள் அவளைக் கிண்டல் செய்தார்கள். 'ஐயோ பாவம்! இவள் மகன் எங்கோ ஓடிப் போய் விட்டானோ என்று எண்ணி கண்ணீர் வடிக்கிறாள் போலிருக்கிறது'' என்று கை தட்டிச் சிரித்தார்கள்.

துர்புத்தி தன் சகாக்களிடம் ''நாம் தீரமதியை வழியில் மடக்கிக் கொல்லப் போவது யாருக்கும் தெரியக் கூடாது'' என்று கூறி அவர்களை அழைத்துக் கொண்டு கடற்கரைக்குச் சென்றான். அவர்கள் மொத்தம் இருபது பேர்கள். அவர்கள் கத்திகளை எடுத்துக் கொண்டு துடுப்புகளுடன் அங்கு கட்டப்பட்டிருந்த படகில் ஏறிக் கொண்டார்கள். அவர்கள் அப்போது உணவு உண்டு விட்டு எப்போது இர

வுப் பொழுது வரப் போகிறது என்று காத்துக் கொண்டிருந்தார்கள்.

அன்று பத்மமுகி உணவு உண்ண வில்லை. அன்றிரவு அவளால் தூங்க வும் கூட முடியவில்லை. ஏனெனில் இனி தன் மகனை உயிரோடு பார்க்க முடியுமா என்ற மனக் கவலை அரித் துக் கொண்டிருந்தது. அப்போது அவளது தங்கையின் உருவம் அவள் முன் தோன்றி ''அக்கா! நீ ஏன் வீணா கக் கவலைப்படுகிறாய்? உன் மக னுக்கு எந்த ஆபத்தும் நேராது'' என்று கூறிவிட்டு மறைந்து போயிற்று.

துர்ப்புத்தி இரவானதும் தன் சகாக் களைப் படகைச் செலுத்தும்படிக் கூறினான். படகு கடலில் போய் ஒரு பாறைத் தீவை அடைந்தது. அங்கு படகை நிறுத்தி அவ்வழியில் தீரமதி எப்போது வருவான் என்று பார்த்த வாறே காத்துக் கொண்டிருந்தார்கள்.



தீரமதி பிரதாபனிடம விடைபெற் றுக் கொண்டு அவன் கொடுத்த பரிசு களோடு கிளம்பினான். அவன் கடற் கரைக்கு வந்து தன் மாலுமிகளுடன் கலந்து பேசி தேவதைகளுக்குப் பிர யாணத்திற்கு முன் கொடுக்க வேண் டிய பலிகளைக் கொடுத்து விட்டு இதாகாவிற்குப் பயணமானான். ஆனால் இந்தத்தடவை கப்பலை வந்த வழியில் செலுத்த வேண்டாம் என்று கூறி சுற்று வழியாகப் போய் இதிகா வைப்போய்ச்சேரும்படிக்கூறினான். கப்பல் இதாகாவை மறுபக்கமுள்ள ஒரு துறையை அடைந்தது. அங்கு தீரமதி இறங்கிக் கொண்டு கப்பலை வழக்கமாகக் அடையும் துறைக்கு ஓட்டிச் செல்லும்படிக் கூறினான்.

கரையில் இறங்கிய தீரமதி தன் தந்தையின் பன்றிக்களைக் காத்து வரும் கிழவனைக் காணச் சென்றான். அப்போது அக்கிழவனும் ரூபதரனும் சமையல் செய்து கொண்டிருந்தார்கள். வெளியே இருந்த நாய்கள் தீரமதி யைக் கண்டு குரைத்தன. ரூபதரனும் கிழவனிடம் ''உன்னைப் பார்க்க யாரோ வந்திருக்கிறார்கள் போலிருக் கிறது. நீ போய் யாரென்று பார்'' என்று கூறி அனுப்பினான்.

கிழவன் கதவைத் திறந்ததும் தன் எதிரே தீரமதி நிற்பதைக் கண்டான். அவனைத் தன் மகனை வரவேற்பது போல வரவேற்று ''ஆகா! வந்து விட் டாயா? உன்னை மறுபடியும் பார்க்கப் போகிறேனா என்று ஏங்கிக் கொண்டி ருந்தேன். நீ என் குடிசைக்கு வருவதே அபூர்வம். பைலாசுக்குப் போயிருந்தா யாமே! எப்போது அங்கிருந்து திரும்பி



அதன்பின் தீரமதி கிழவனிடம் ''இவர் யாரென்று சொல்ல வில்லையே. இவரை இங்கே யார் அழைத்து வந்தார்கள்?'' என்று கேட் டான். கிழவனும் ''இவர் கிரீட் தீவில் வாழ்பவர். பல நாடுகளைப் பார்த்துக் கொண்டே இங்கே வந்திருக்கிறார். இவர் ஒரு விபத்திலிருந்து தப்பியவர். இவரை நீ உன் வீட்டிற்கு அழைத்துப் போகிறாயா?'' என்று கேட்டான்.

தீரமதியும் ''தாத்தா! என்னைப் பரீட்சிக்கிறாயா? என் வீட்டின் நிலைமை உனக்குத் தெரியாதா? அங் கிருப்பவர்கள் எல்லோரும் என் எதிரி கள். அவர்களை எப்படி வெளியேற்று வது என்றே என் தாயார் யோசித்துக் கொண்டிருக்கிறாள். நான் இவருக்குத் தேவைப்படும் துணிமணிகளையும் காலணிகளையும் கொடுக்கிறேன். ஈட்டியும் வாளும் கொடுக்கிறேன். இவற்றோடு அவர் எங்கு போக விரும் பினாலும் போகட்டும். அவர் எங்கும் போக விருப்பப் படாமல் இந்தக் குடிசையிலேயே இருந்துவிடுவ தானாலும் இருக்கட்டும். அவர் வேறு எங்காவது போக விரும்பினாலும் அதற்கான ஏற்பாடுகளையும் நான் செய்து கொடுக்கிறேன். அவரை அந் தப் போக்கிரிகளுக்கிடையே விட்டு வைக்க நான் விரும்பவில்லை. அவர் களால் இவருக்குத் தொந்தரவுதான் ஏற்படும். இவருக்கும் தொல்லை ஏற் படுத்தி நானும் ஏன் அவமானப்பட வேண்டும்?'' எனக் கூறினான்.

அதன் பிறகு அவன் ''தாத்தா! நீங் கள் என் வீட்டிற்குப் போய் யாருக்கும் தெரியாமல் என் தாயாரை சந்தித்து நான் இங்கு வந்திருப்பதையும் எனக்

வந்தாய்?'' என்று கேட்டான். தீரமதி யும் ''இப்போதுதான் வருகிறேன். என் அம்மா எப்படி இருக்கிறாள்?'' என்று கேட்டான். அவனும் ''உன் அம்மா நலமாகவே இருக்கிறாள். ஆனால் எப்போதும் அவள் வருத்தப் பட்டுக் கொண்டே இருக்கிறாள். அந்தக் கயவர்களின் தொல்லை எப் போது தீரும் என்றே அவள் ஏங்கிக் கொண்டிருக்கிறாள்'' என்றான்.

தீரமதி உள்ளே வந்தது கண்டு ரூப தரன் எழுந்து அவன் உட்கார இடம் அளிக்க முயன்றான். ஆனால் தீரம தியோ ''தாத்தா! நீங்கள் எழுந்திருக்க வேண்டாம். நான் வேறு இடத்தில் உட்கார்ந்து கொள்கிறேன்'' என்று கூறினான். கிழவனும் தீரமதி உட்கார ஒரு தோலை எடுத்து விரித்தான். மூவ ரும் சேர்ந்து உணவு உண்டார்கள்.

காகக் கவலைப்பட வேண்டாம் என்றும் கூறுங்கள்'' என்றான். கிழவனும் ''நீ கிளம்பிப் போனதிலிருந்து உன் தாத்தா கூட அன்ன ஆகாரமில்லாமல் இருக்கிறார். அவரிடமும் நீ திரும்பி வந்ததைச் சொல்லட்டுமா?'' என்று கேட்டான்.

தீரமதியும் ''நீங்கள் இப்போதைக்கு என் தாயாருக்கு மட்டும் கூறினால் போதும். இதைச் சொல்லி விட்டுத் திரும்பி வந்து விடுங்கள்'' என்றான். கிழவனும் சென்று விடவே அக்குடிசையில் தந்தையும் மகனும் இருந்தனர். அப்போது ரூபதரனுக்கு மட்டும் தெரியும் விதத்தில் புத்திமதி தேவதை தோன்றி அவனை வெளியே வரும்படி சைகை செய்தது. ரூபதரனும் எழுந்து வெளியே சென்றான்.

தேவதை அவனிடம் ''நீ உன் மகனிடம் நீயாரென்று கூறி அவனது உதவியோடு உன் எதிரிகளை ஒழித்து விடு. உங்களுக்கு நான் உறுதுணையாக இருக்கிறேன். அந்தப் பாவிகள் ஒழியட்டும்'' என்று கூறித் தன் கையிலிருந்த கோலால் அவனைத் தொட்டது.

மறு நிமிடமே அவனது கிழ உருவம் மாறி கட்டு மஸ்தான உடலுடன் கூடிய வீரனாக மாறிவிட்டான். அவன் குடிசைக்குள் அந்த வடிவில் சென்ற போது அவனைக்கண்டு தீரமதி ஆச்சரியப் பட்டான். அவன் ''ஐயா! நீங்கள் யார்? தேவபுருஷனா? இப்படி உரு மாறி வந்திருக்கிறீர்களே'' என்று கேட்டான். அப்போது ரூபதரன் தான் யாரென்பதை அவனிடம் கூறினான்.

''தீரமதி! நான் உன் தந்தை ரூபதரன் நான் பல இன்னல்களை அனுபவித்து விட்டு எனது இந்தத் தாய் நாட்டை அடைந்திருக்கிறேன். நம் வீட்டில் இப்போதுள்ள போக்கிரிகளைப் பற்றிய விவரங்களைக் கூறு. அவர்கள் அனைவரையும் நாம் இருவரும் சேர்ந்து ஒழிப்போம்.''

இவ்வாறு ரூபதரன் கூறியதும் தீர





யும் எடுத்து ஒளித்து வைத்து விடு. அவை எங்கே என்று யாராவது உன்னிடம் கேட்டால் அவை துருப்பிடித்துள்ளன என்றும் அவற்றைப் போக்க வெளியே கொடுத்திருப்பதாகக் கூறி விடு. ஆனால் உனக்கும் எனக்கும் வேண்டிய ஆயுதங்களை மட்டும் நாம் எப்போது வேண்டுமானாலும் எடுத்துக் கொள்ளும் வகையில் வைத்திரு. நீ அதிகமாக மதுவைக் குடித்துவிட்டு யாருடனாவது சண்டை போட்டுக் கொண்டிராதே. இப்படி எல்லாம் எச்சரிக்கையுடன் இருந்தால் நம் வேலை எளிதில் முடிந்து விடும். ஆனால் ஒரு விஷயத்தை மட்டும் மறந்து விடாதே. நான் திரும்பி வந்து விட்டேன் என்பது நம் இருவரைத் தவிர வேறு யாருக்கும் தெரியவே கூடாது. உன் தாயாருக்கும் இந்தப் பன்றி மேய்ப்பவனுக்கும் கூடத் தெரியக்கூடாது. இந்த விஷயம் பரம ரகசியமாகவே இருக்க வேண்டும். தெரிந்ததா? இதை நன்கு நினைவில் வைத்துக் கொள்'' என்று தன் மகனிடம் கூறினான்.

மதி ''அவர்கள் மொத்தம் நூற்று எட்டுப் பேர்கள். இவர்கள் போக ஆறு பணியாட்களும் உள்ளனர். இவர்களையெல்லாம் நாம் இருவர் மட்டும் எப்படி எதிர்க்க முடியும்?'' என்று கேட்டான்.

ரூபதரனும் ''கவலைப்படாதே, நம் இருவருக்கும் உதவ புத்திமதி தேவதை இருக்கிறாள். அதனால் நீ நாளைக் காலையே நம் வீட்டிற்குப் போ. நான் ஒரு பிச்சைக்காரன் போல வேஷம் போட்டுக் கொண்டு நம் பன்றிகளை மேய்க்கும் இந்தக் கிழவனோடு வருவேன். அந்தப் போக்கிரிகள் என்னை எவ்வளவு அவமானப் படுத்தினாலும் அதைக் கண்டு கொள்ளாதவன் போல இரு. ஆனால் ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள். நம் வீட்டிலுள்ள எல்லா ஆயுதங்களை

இதற்குள் தீரமதி சென்ற கப்பல் இதாகாவின் முக்கிய துறைமுகத்தைப் போய்ச் சேர்ந்தது. அந்தக் கப்பலை ஓட்டி வந்த ஒரு மாலுமி ரூபதரனின் வீட்டை அடைந்தான். அவனும் பன்றி மேய்ப்பவனும் ஒரே சமயத்தில் ரூபதரனின் வீட்டிற்குப் போகும் பாதையில் சென்று கொண்டிருந்தார்கள். பத்மமுகியிடம் மாலுமி தீரமதி திரும்பி வந்து விட்டான் என்ற செய்தியைக் கூறினான். அந்தத் தகவல் துர்புத்திக்கும் அவனது சகாக்களுக்கும் தெரிந்துவிட்டது. அவர்கள் பெருத்த கலகத்தையே ஆரம்பித்து விட்டார்

கள். தீரமதி அவ்வீடடிற்கு வருவதற்குள் அவனை நடு வழியில் பிடித்துக் கொன்று விட வேண்டுமென்று அவர்கள் தீர்மானித்தார்கள். அவர்களது திட்டம் பலிக்கவில்லை. தீரமதி உயிர் தப்பி விட்டான்.

துர்புத்தியோ தன் சகாக்களிடம் ''பயல் இந்தத் தடவை எப்படியோ தப்பித்து விட்டான். இவனை எப்படியாவது விரைவில் நாம் கொன்று விட வேண்டும். இல்லாவிட்டால் நமக்குத்தான் ஆபத்து. மக்கள் இப்போது நம்மை வெறுக்கிறார்கள். இவன் வேறு வந்து இங்கு நாம் செய்து கொண்டிருப்பதை எல்லாம் மற்றவர்களுக்குக் கூறினால் மக்கள் நம்மீது மேலும் வெறுப்படைந்து நம்மை அடித்துத் துரத்தி விடுவார்கள். எனவே அவன் இங்கே வரும் போது அவனை எப்படியாவது பிடித்துக் கொன்று விட்டு இந்த சொத்தை எல்லாம் நாம் பங்கு போட்டுக்கொண்டு விட வேண்டும். நம்மில் யார் பத்மமுகியை மணப்பானோ அவனுக்கு இந்த அரண்மனை சொந்தமாகிவிடும். நாம் மட்டும் தீரமதியை உயிருடன் விட்டு வைத்தால் நமக்கு இவை எல்லாம் கிடைக்காமல் போய் விடும், அவரவர் வீட்டில் இருந்தபடியே பத்மமுகியை மணக்கத்தான் முயற்சி செய்ய வேண்டி இருக்கும்'' என்றான்.

ஒரு சிலர் தீரமதியைக் கொல்லக் கூடாது என்று அபிப்ராயப் பட்டார்கள். ஒருவனோ ''தீரமதிக்கு இப்போது மரண யோகம் இருக்கிறதா என்று சோதிடர்களிடம் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டும். அவனுக்கு மட்டும் மரணயோகம் இப்போது இருந்தால் நானே அவனைக் கொல்லத்தயார்'' என்றான். அது பற்றி சோதிடர்களைக் கேட்கலாம் என்று தீர்மானிதது அவர்கள் கலைந்து சென்றார்கள்.

அன்று மாலை பன்றி மேய்ப்பவன் தன் குடிசைக்குத் திரும்பி வருவதற்குள் புத்திமதி தேவதை ரூபதரனை மறுபடியும் முன்பிருந்த கிழவன் உருவிற்கு மாற்றி விட்டது. அன்றிரவு சாப்பிட்ட பின் தீரமதியும் தன் தந்தையுடனும் பன்றி மேய்ப்பவனுடனும் சேர்ந்து அதே குடிசையில் படுத்து உறங்கினான்.

**(தொடரும்)**



# செய்திகளில் சிறுவர்கள்

## நுனிநாக்கில் உலகம்!

ஆப்பிரிக்கக் கண்டத்தில் எவ்வளவு நாடுகள் உள்ளன? டர்க்மேனிஸ்தானின் தலைநகர் எது? உக்பெகிஸ் தானில் புழங்கும் நாணயம் எது? இப்படிப்பட்ட கேள்விகளை எல்லாம் மும்பயி பிரஸ் கிளப் மோனிகா மேனன் என்ற ஐந்து வயது சிறுமியிடம் கேட்க அவளும் சற்றும் தயங்காமல் உடனுக்குடன் சரியான பதில்களைக் கூறி எல்லோரையும் ஆச்சரியத்தில் ஆழ்த்தினாள். உலகின் 185 நாடுகளின் தலைநகர்கள், அவற்றில் புழங்கும் நாணயங்கள் எல்லாம் அவளுக்குத் தலை கீழ்ப் பாடம். இந்த வினா விடை நிகழ்ச்சி முடிந்ததும் முதலாவது வகுப்பில் படிக்கும் மோனிகாவின் தாய் வனஜா மேனன் கடந்து ஆண்டு தன் மகளுக்கு பிறந்த நாள் பரிசாக 'ஒரு க்ளோப்' வாங்கிக் கொடுத்ததாயும் அச்சிறுமி அதனை எப்போதும் சுழற்றிப் பல நாடுகளை அதில் கண்டு அவை பற்றிய விவரங்களைத் தன் வீட்டிலுள்ள 'என் சைக்ளோபீடியா'வில் படித்துத் தெரிந்து கொண்டாள் எனக் கூறினார். அதற்கு அச்சிறுமியின் தந்தையும் உதவினாராம். பெற்றோர்கள் தம் குழந்தைகளின் இயல்பை அறிந்து நல்ல விதமாக ஊக்கு வித்து வளர்த்து வர வேண்டும் என்பதற்கு இது ஒரு எடுத்துக் காட்டு.

## அறிவுப் பெட்டகம்

'மென்பா' என்பது உலக அறிவாளிகளை உறுப்பினர்களாகக் கொண்ட ஒரு அமைப்பு. இதில் இங்கிலாந்ததைச் சேர்ந்தவர்கள் மட்டும் 40,000 பேர்கள் உறுப்பினர்கள். இவர்களில் மிகக் குறைந்த வயதுடையவள் மேற்கு இங்கிலாந்தின் மாடெல்லாரியானன் பெய்ன். இவளது வயது மூன்றே. இந்த அமைப்பில் சேருவதற்கு வைக்கப்பட்ட தேர்வில் இவள் மிக உயரிய இடம் பெற்றாள். தன்னைவிட இரு மடங்கு வயதானவர்கள் படிக்கும் புத்தகங்களை இவள் அநாயாசமாகப் படித்து விடுகிறாள். இவள் இப்போதுதான் நர்ஸரி வகுப்பில் சேர்ந்திருக்கிறாளாம்.

## சீனமொழியில் சிறுமியின் சிறப்பு!

தென் சீனாவின் டாங்க் டாங்க் என்ற மூன்று வயதுச் சிறுமி சீன மொழியின் 3000 எழுத்துக்களைப் படிக்கிறாளாம். அம்மொழியில் சுமார் 6,000 அடிப்படை எழுத்துக்கள் உள்ளன. வளைவுகள், கொக்கிகள் ஆகியவற்றின் உதவியால் வார்த்தைகள் உருவாக்கப்படுகின்றன. 20 மாதக் குழந்தையாக இருக்கும் போதே டாங்க் 200 பாடல்களையும் நர்ஸரி ரைம்களையும் மனப்பாடம் செய்து விட்டாள். அப்போதே 10,000 வார்த்தைகளை அவளால் எழுத முடிந்ததாம். இவளது பெயர், ஷாங்கய் கின்னஸ் புக் ஆஃப் வேல்ட் ரிகார்ட்ஸில் இடம் பெற்றது ஆச்சரியப் படத்தக்கதல்லவே!

## இயற்கையின் நண்பன்!

டில்லியில் எட்டாவது வகுப்பு மாணவன் ஹர்ஷ்பாட்ரா சுற்றுப் புறச் சூழலைப் பாதுகாக்கப் 'பஞ்ச வடி' என்ற திட்டத்தை உருவாக்கியுள்ளான். சிறுவர்களிடையே சுற்றுப்புறச் சூழல் பற்றிய விழிப்புணர்வை ஏற்படுத்த ஐநா அமைப்பு அண்மையில் சிறுவர்களின் கூட்டம் ஒன்றைக் கூட்டியது 80 நாடுகளின் சிறுவர், சிறுமியர் இதில் கலந்து கொண்டார்கள். நம் நாட்டின் ஒரே பிரதிநிதியாக பனிரெண்டு வயதான ஹர்ஷ் பாட்ரா சென்று அதில் பேசுகையில் தன் பஞ்சவடித் திட்டத்தை விவரித்தான். எல்லா நாடுகளிலும் ஈகோ க்ளப்கள் ஏற்படுத்த வேண்டுமென்றும் அம்மாதிரிக் கூட்டங்கள் அடிக்கடி கூட்டப்பட வேண்டும் என்றும் அவன் கூறினான். சாதாரணமாய் விளையாட்டு, தொலைக்காட்சி கம்ப்யூட்டர் என்று ஆர்வம் காட்டும் இந்த வயதில் இயற்கைப் பற்றி ஆர்வம் கொண்டு அதனை பாதுகாக்க திட்டங்கள் தீட்டும் ஹர்ஷ் பாட்ரா பாராட்டிற்கு உரியவன்தானே!



# நம்பிக்கை போயிற்று!

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீது ஏறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அதனைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கி அவன் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து ''மன்னனே! இந்த பயங்கர நடுராத்திரியில் ஏன் இப்படி சிரமப் படுகிறாய்? உன்னிடம் ஏதோ ஒரு அபூர்வ சக்தி இருக்கிறது என்று எண்ணி இந்த வேலையை ஏற்றுக் கொண்டிருக்கிறாயா? தனக்கு அபூர்வ சக்தி இருக்கிறது என்று எண்ணிச் செயல்பட்ட ரகுவீரன் என்ற அரச குமாரனின் கதையை உனக்குக் கூறுகிறேன் கவனமாகக் கேள்'' என்று கூறிக் கதை சொல்ல ஆரம்பித்தது.

வெகு நாட்களுக்கு முன் நர்மதை நதிக் கரையில் நந்தினிபுரம் என்ற சிறிய நாடு இருந்தது. அதன் மன்னன் ரணவீரன். அவனது மகன் ரகுவீரன்.

## வேதாளம் சொல்லும் கதை



அவனது நண்பன் சேனாதிபதியின் மகனான சந்திரகாந்தன். இவர்களிருவரும் சிறு வயதில் மந்திரியின் மகளான மந்தாகினியுடன் விளையாடியவர்கள். ரகுவீரனும் சந்திரகாந்தனும் படிப்பிற்காக ஒரு குருகுலத்தில் சேர்க்கப்பட்டனர்.

அவர்களது படிப்பு முடிந்து குருகுலத்தை விட்டுச் செல்லுமுன் குரு ரகுவீரனைத் தனியாக அழைத்துப் போய் அவனுக்குக் கூடுவிட்டுக் கூடு பாயும் வித்தையைச் சொல்லிக் கொடுத்தார். அதைக் கொண்டு ஒருவன் தன் உடலில் உள்ள உயிரை வேறொரு உயிரற்ற உடலுக்குள் செலுத்தி விட முடியும்.

ரகுவீரனும் சந்திரகாந்தனும் தலைநகருக்குத் திரும்பி வந்தார்கள். அரண்மனைக்குப் பக்கத்தில் ஒரு பரந்த மைதானம் இருந்தது. அதில் இளைஞர்களுக்கான பலவிதப் போட்டிகள் நடந்து கொண்டே இருக்கும்.

ஒருமுறை இம்மாதிரியான ஒரு போட்டியில் கலந்து கொண்ட ரகுவீரன் ஒரு சாதாரணப் போர்வீரனின் மகனிடம் தோற்றுப் போனான். வெற்றி பெற்ற இளைஞன் ரகுவீரனை கேலி செய்து கொண்டே இருக்கவே ரகுவீரன் தனக்கு வந்த கோபத்தை அடக்கிக் கொண்டு பேசாமல் இருந்தான். ஆனரல் அன்றிரவே போர் வீரனுக்கு விஷஜுரம் கண்டது. உடல் நலனடைய அவனுக்கு ஒரு மாத காலம் பிடித்தது. இது ரகுவீரனுக்குத் தெரியவே தன்னிடம் வம்பு செய்ததால்தான் அந்த இளைஞன் நோயுற்றான் என எண்ணினான்.

வேறொரு முறையில் ரகுவீரனும் மந்தாகினியும் பூங்காவில் சிரித்துப் பேசிக் கொண்டிருக்கையில் அரண்மனை வைத்தியரின் மகன் வெறி கொண்டவன் போல ரகுவீரன் மீது ஒரு கல்லை எறிந்தான். ரகுவீரனுக்கு லேசான காயமே ஏற்பட்டது. ஆனால் அன்று மாலையில் வைத்தியரின் மகனை ஒரு பாம்பு கடிக்கவே அவன் தந்தையின் சிகிச்சையால்தான் பிழைக்க முடிந்தது. இதுவும் ரகுவீரனுக்கு தெரியவே அப்போதும் முன் போல எண்ணிப் பெருமை கொண்டான்.

மந்தாகினி நல்ல அழகி. அவளை ரகுவீரனும் விரும்பினான். சந்திரகாந்தனும் விரும்பினான். ஆனால் அவள் யாரை விரும்பினாள் என்பது அவர்களுக்குத் தெரியவில்லை. ஒருநாள் மூவரும் ஒரு மாந்தோப்பிற்குச் சென்

றார்கள். அங்கு ஒரு மரத்தில் மட்டும் ஒரு பெரிய மாங்காய் இருந்தது. அதைப் பறித்துத்தரும்படி மந்தாகினி அந்த இருவரிடமும் கூறினாள்.

சந்திரகாந்தன் ஓங்கி உயர்ந்து வளர்ந்திருந்த அந்த மரத்தின் மீது ஏற லானான். ரகுவீரன் சுற்றிலும் பார்த் தான். சற்று தூரத்தில் ஒரு கிளி செத்துக் கிடந்தது. அவன் தன் குருவிடம் கற்ற கூடு விட்டுக்கூடு பாயும் வித்தையால் சட்டெனத் தன் உயிரை அதன் உடலில் புகுத்தி உயரப் பறந்து போய் அந்த மாங்காயைக் கீழே வீழ்த்தினான். பிறகு கிளியின் உடலிலிருந்த உயி ரைத் தன் உடலில் செலுத்தி மாங் காயை எடுத்து வந்து அவன் மந்தா கினியிடம் கொடுத்தான்.



இதைக் கண்ட சந்திரகாந்தன் கோபம் கொண்டு ''ரகுவீரா! இது முறையல்ல. நீயும் என்னைப் போல மரத்தின் மீது ஏறி உன் திறமையைக் காட்டி இருக்க வேண்டும். மாய மந்தி ரங்களால் ஒரு செயலைச் செய்பவன் வீரனே அல்ல'' என்று கூறிக் கொண்டே மரத்திலிருந்து கீழே இறங்கி விழவே அவனது கால் எலு ம்பு முறிந்தது. அவன் மூன்று மாத காலத்திற்கு நடக்க முடியாமல் படுக் கையிலே கிடந்தான்.

இந்த நிகழ்ச்சிகளின் ஆதாரத்தில் ரகுவீரன் தனக்கு ஏதோ ஒரு அபூர்வ சக்தி இருக்கிறது என்றும் அதனால் தான் தனக்கு எதிராக கூட செயல்படு வர்களுக்கு எதாவது கெடுதல் ஏற்படு கிறது என்றும் முடிவுக்கு வந்தான். அவை ஏதோ தற்செயலாக நிகழ்ந் தவை என்று எண்ணவும் இல்லை. யாராவது தனக்கு எதிராகச் செயல்பட் டால் அவனுக்குக் கண்டிப்பாக ஏதா வது ஒரு கெடுதல் ஏற்படத்தான் செய் யும் என்று ரகுவீரனின் மனம் உறுதி யாக நம்பியது.

தன் மகன் ரகுவீரன் மந்திரியின் மகளான மந்தாகினியுடன் நெருங்கிப் பழகுவதை மன்னன் ரணவீரன் கவனித்தான். அதனால் அவன் ரகு வீரனிடம் ''நான் உனக்குத் திருமண மும் பட்டாபிஷேகமும் சேர்த்து நடத்த நினைக்கிறேன். நான் மந்திரி யுடன் கலந்து பேசிவிட்டு தக்க ஏற் பாடுகளைச் செய்யட்டுமா?'' என்று கேட்டான்.

ரகுவீரனும் புன்னகை புரிந்து மௌனமாக இருந்து தன் சம்ம தத்தை தெரிவித்தான். தன் தந்தை தன் மனதை புரிந்து கொண்டாரே என எண்ணி அவன் மகிழ்ந்து



போனான். நல்ல வேளையாக ஒரு அரசகுமாரியைத்தான் அவன் மணக்க வேண்டும் என்று அவர் நிர்பந்தப் படுத்தவில்லையே என்று நினைத்துக் சந்தோஷப்பட்டான்.

இந்த நற்செய்தியை மந்தாகினி யிடம் கூறத் துடித்த அவன் அன்று மாலை தன்னை நதிக்கரையில் வந்து சந்திக்கும்படி செய்தி அனுப்பினான். அதன்படி அவன் அவளுக்காக நதிக் கரையில் காத்திருந்த போது மந்தா கினியும் சந்திரகாந்தனும் சேர்ந்து பேசிக்கொண்டே வந்து சேர்ந்தார்கள். அவர்கள் மூவரும் ஒரு படகில் அமர்ந்து ஆற்றின் நடுவே உள்ள ஒரு மணல் திட்டை நோக்கிச் சென்றார் கள். சந்திரகாந்தன் தன் நண்பனான படியால் அவனுக்கும் அந்த நற்செய் தியை கூறுவது நல்லது என்று ரகு வீரன் எண்ணினான். ஆனால் சந்திர காந்தனும் தன்னைப் போலவே மந்தா கினியை விரும்புகிறான் என்பது ரகு வீரனுக்குத் தெரியாது.

சந்திரகாந்தன் முன் கோபக்காரன். யாருக்கும் பயப்படாதவன். எனவே ரகுவீரன் மந்தாகினியை மணக்க மன்னன் சம்மதித்து விட்டான் என்று ரகுவீரன் சொன்னதும் அவன் ''நீ அரச குமாரன், உன் தந்தை மன்னன், அத னால் நீங்கள் சொல்வதுதான் சட்டம். நான் மந்தாகினியை மிகவும் விரும்பு கிறேன் என்பதை நீ அறிந்திருந்தும் நீ அவளை மணக்கப் போவது எனக்கு செய்யும் பெரிய துரோகமாகும்'' என்று கோபத்தோடு கூறினான்.

மந்தாகினியோ இதையெல்லாம் கேட்டும் எதுவும் கூறாமல் இருந்தாள். ரகுவீரன் தனக்கு வந்த கோபத்தை அடக்கிக் கொண்டு சந்திரகாந்தனை சமாதானப் படுத்த முயன்றான். ஆனால் சந்திகாந்தனின் கோபம் தணியவில்லை. அவன் தன் வாளை உருவி எடுத்து கொண்டு ரகுவீரன் மீது பாய்ந்தான். ரகுவீரனோ சற்றும் கவலைப்படாமல் தன்னை தனக் குள்ள அபூர்வ சக்தி காப்பாற்றி விடும் என்று எண்ணி சந்திரகாந்தனின் கையைப் பிடித்தான். ஆனால் சந்திர காந்தன் திமிறவே படகு ஆட்டம் கண்டு கவிழ்ந்து விட்டது.

முதலில் ஆற்றில் விழுந்த மந்தா கினி யாரையும் பாராமல் கரையை நோக்கி நீந்திச் சென்றாள். அதன் பிறகு ஆற்றில் ரகுவீரனும் சந்திரகாந்தனும் விழுந்தனர். அப்போது ரகுவீரன் ''என்னை எதிர்த்த இந்த சந்திரகாந்தன் கண்டிப்பாக நீரில் மூழ்கி இறப்பான்.

ஏனென்றால் என் அதிசய சக்தி அவ்வாறு செய்து விடும்'' என்று எண்ணினான். ஆனால் கவிழ்ந்த படகின் நுனி ரகுவீரனின் தலை மீது பலமாகப் படவே அவன் தன் நினைவை இழந்து விட்டான்.

ரகுவீரன் தன் நினைவை அடைந்து கண் விழித்து பார்த்த போது தன் வயிற்றின் மீது உட்கார்ந்திருக்கும் சந்திர காந்தன் வயிற்றில் புகுந்த நீரை வெளியேற்ற முயன்று கொண்டிருப்பதைக் கண்டான். அவன் பக்கம் மந்தாகினி நின்று கொண்டிருப்பதை ரகுவீரன் கண்டான். உடனே அவன் எழுந்து உட்காரவே சந்திரகாந்தன் ஒரு முறை முறைத்துப் பார்த்து விட்டு அவனிடம் ஒரு வார்த்தை கூடப் பேசாமல் அங்கிருந்து போய் விட்டான்.

அப்போது மந்தாகினி ரகுவீரனிடம் ''நல்ல நீச்சல்காரனான நீ ஒரு சிறு அடிபட்டதும் ஏன் நினைவிழந்து போய்விட்டாய் என்பதற்குக் காரணம் தெரியுமா? சந்திரகாந்தன் தன் ரகசியம் ஒன்றை வெகு நாட்களுக்கு முன் என்னிடம் கூறினான். அவனிடம் ஒரு அபூர்வ சக்தி இருக்கிறதாம். சரியான சமயத்தில் அந்த சக்தி அவனது எதிரியை இம்மாதிரி விபத்தில் சிக்க வைத்து விடுமாம். சில சமயங்களில் அது அந்த எதிரியின் உயிரையே கூடப் போக்கி விடுமாம். இப்போது தெரிந்ததா?'' என்று கூறிவிட்டு அவன் என்ன சொல்லப் போகிறான் என்பதைக் கேட்கக் கூடக் காத்திராமல் அங்கிருந்து போய் விட்டாள்.

அதன் பிறகு ரகுவீரன் அரண்மனைக்குப் போய் ''தந்தையே! இப்போது நான் மணம் புரிந்து கொள்ள விரும்பவில்லை. கொஞ்ச காலத்திற்கு நம் நாட்டைச் சுற்றிப் பார்த்து விட்டு வர நினைக்கிறேன். இதற்கு அனுமதி அளியுங்கள்'' என்று வேண்டினான். மன்னனும் அவனது வேண்டுகோளை ஏற்று நாட்டைச்சுற்



றிப் பார்த்து வர அவனுக்கு அனுமதி அளித்தான். ரகுவீரனும் சற்றும் தாமதியாமல் உடனே கிளம்பிப் போய் விட்டான்.

வேதாளம் இக்கதையைக் கூறி ''மன்னனே! ரகுவீரனின் செயல் விசித்திரமாக இல்லை? மன்னனே அவன் மந்தாகினியை மணந்து கொள்ளலாம் என்று கூறியும் ஏன் அவன் நாட்டைச் சுற்றிப் பார்க்கக் கிளம்பி விட்டான்? சந்திரகாந்தனிடம் அவனுக்கு பயமா? மந்தாகினியை அவன் மணந்து கொண்டால் சந்திரகாந்தனின் அபூர்வ சக்தி தன்னை கொன்று விடும் என்று பயந்து விட்டானா? அல்லது மூழ்கியிருந்த தன்னை சந்திரகாந்தன் காப்பாற்றினான் என்பதற்காக அவனுக்கு நன்றி செலுத்தும் வகையில் மந்தாகினியை சந்திரகாந்தனே மணந்து கொள்ளட்டும் என்று அவன் விட்டுக் கொடுத்தானா? இக்கேள்விகளுக்கெல்லாம் உனக்குச் சரியான விடை தெரிந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்கு நூறாகி விடும்'' என்றது.

விக்கிரமனும் ''ரகுவீரன் முதலில் அபூர்வ சக்தியை நம்பி இருந்தவன், அதனால்தான் சந்திரகாந்தன் ஆற்றில் மூழ்கி இறந்து விடுவான் என்று எண்ணினான். ஆனால் அதற்கு நேர் மாறாகத்தானே ஆபத்திற்கு ஆளானது கண்டு அவனுக்கு அபூர்வ சக்தி மீதிருந்த நம்பிக்கை போய் விட்டது. எனவே சந்திரகாந்தனுக்கும் எந்த அபூர்வ சக்தியும் கிடையாது என்று அவன் நம்பினான். அதனால் சந்திகாந்தனிடம் அவனுக்கு எவ்வித பயமும் இல்லை. ஆற்றில் விழுந்த மந்தாகினி ரகுவீரனைப் பற்றிக் கவலைப்படாமல் நீந்திச் சென்று விட்டாள். அதனால் தன் மீது அவளுக்கு எவ்வித அன்பும் இல்லை என்று ரகுவீரன் தெரிந்து கொண்டான். தன்னை காப்பாற்றிய சந்திகாந்தனே மந்தாகினியை மணந்து கொள்ளட்டும் என்றும் அது அவனுக்குத்தான் செலுத்தும் நன்றிக் கடன் என எண்ணியே நாட்டைச் சுற்றி வரக் கிளம்பினான்'' என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்த வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.





# வல்லவனுக்கு வல்லவன்!

பட்டியூரில் பரமசிவம், சாம்பசிவம் என்ற இரு வாய்ச்சொல் வீரர்கள் இருந்தனர். இருவருக்கும் யார் பேச்சில் மிஞ்சுவார்கள் என்ற போட்டி இருந்த கொண்டே இருந்தது. ஒரு நாள் பரமசிவமும் சாம்பசிவமும் தன் வயல்களுக்குப் போய்க் கொண்டிருந் தார்கள். சாம்பசிவத்தை எப்படியாவது மட்டம் தட்ட வேண்டுமென்று பரமசிவம் நினைத்தான்.

பரமசிவம் அவனிடம் ''சாம்ப சிவா! தினமும் என் வயலில் உன் ஆடுகள் நுழைந்து மேய்கின்றன. அவை ஏற்படுத்தும் நஷ்டத்திற்கு ஈடாக, தினமும் நீ எனக்கு ஒரு படி ஆட்டுப்பால் கொடுக்க வேண்டும்'' என்றான்.

சாம்பசிவமோ ''ஆடு மாடுகள் புல்லையும் தழைகளையும் தின்னும். உன் வயலில்தான் எதுவுமே இல்லையே'' என்றான். பரமசிவமோ ''ஏன் இல்லை? அதோ பார்! பசு மாடு புல் மேய்ந்து கொண்டிருக்கிறது'' எனவே சாம்பசிவமும் ''நீ ஆடு மேய்வது பற்றிதானே சொல்லிக் கொண்டிருந்தாய். இப்போது பசுவைப் பற்றிப் பேசுகிறாயே'' என்றான்.

பரமசிவமோ சற்றும் சளைக்காமல் ''சரி, என்னோடு வா. ஆடு மேய்வதைக் காட்டுகிறேன்'' என்றான். இருவரும் கொஞ்சதூரம் நடந்து சென்றார்கள். அங்கு மேய்ந்து கொண்டிருந்த பசுக்களுக்குப் பின்னால் ஒரு ஆடும் இருந்தது. பரமசிவம் அதைக் காட்டி ''அதோ பார்த்தாயா? ஆடு இருக்கிறது! அது மேயத்தான் வந்திருக்கிறது'' என்றான்.

சாம்பசிவமோ ''அந்த ஆடு வயலுக்கு மேயத்தான் வந்திருக்கிறது என்று எப்படிக் கூறுகிறாய்? என் கண்ணால் அது மேய்வதைப் பார்த்தால் தான் நம்புவேன்'' என்றான். பரமசிவமும் ''சரி. அதையும்தான் நீ பார்க்கப் போகிறாய்'' என்று கூறிவிட்டு அந்த ஆட்டைக் காய்கறிச் செடிகளுள்ள

—எஸ். சோபினி-

பாத்திகளின் பக்கம் விரட்டினான். அது அங்குள்ள செடிகளை மேயலாயிற்று.

பரமசிவமும் ''பார்த்தாயா ஆடு என்ன செய்கிறது என்று? இப்போது என்ன சொல்கிறாய்?'' என்று மார் தட்டிக் கொண்டு கேட்டான். அப்போது சாம்பசிவம் ''நான் என் ஆட்டைப் பற்றித்தான் கூறினேன். இந்த ஆட்டைப் பற்றி அல்ல. நான் என் கண்ணால் பார்த்தால்தான் நம்புவேன் என்று முதலிலேயே சொல்லி விட்டேன்'' என்றான். அப்போது சாம்ப சிவத்தின் ஆடுகளை மேய்ப்பவன் ஆடுகளை ஓட்டிக் கொண்டு அவ்வழியே வந்தான். அப்போது பரமசிவம் அந்த ஆடுகளைக் காட்டி ''இந்த ஆடுகள் உன்னுடையவை தானே'' என்று கேட்க அவனும் ஆம் என்பது போலத் தலையை ஆட்டினான்.

பரமசிவம் அந்த ஆடு மேய்ப்பவனைக் கூப்பிட்டு ''ஏய்! இந்த ஆடுகளைக் காய்கறிப் பாத்திகளுக்குள் மேய விரட்டு'' என்றான். ஆடு மேய்ப்பவன் ஆச்சரியப்பட்டு ''இவை எல்லாச் செடிகளையும் நொடியில் மேய்த்து விடுமே'' என்று தயங்கியவாறே கூறினான். பரமசிவமோ ''நீ சும்மா ஓட்டு. உன் எஜமானன் தன் கண்ணால் பார்க்கட்டும்'' என்றான். ஆடு மேய்ப்பவனும் ஆடுகளைக் காய்கறிப் பாத்திகளுள் விரட்டினான்.

ஆடுகள் தங்கு தடை இல்லாமல் அதிலுள்ள செடிகளைக் கடித்து சாப்பிடலாயின. அப்போது பரமசிவம் வெற்றி பெற்றவன் போல பலமாகக் கைதட்டி ''சாம்பசிவம்! பார்! நன்றாகப் பார். உன் ஆடுகள்தான் என் காய்கறிச் செடிகளை மேய்ந்து கொண்டிருக்கின்றன'' என்றான்.

சாம்பசிவமோ ''நான் பார்க்க மாட்டேன்'' என்றான். பரமசிவமோ ''அப்படியானால் உன் ஆடுகளைப் பற்றி நான் சொன்னதை ஒப்புக் கொள்'' என்றான். சாம்பசிவமோ ''அதெப்படி நான் ஒப்புக் கொள்வேன்? நான்தான் என் கண்ணால் பார்த்துபின் தானே நம்புவேன் என்று கூறினேனே. இப்போதும் நான் பார்க்கவில்லையே. அதனால் நீ கூறுவதை நான் ஏற்க முடியாது'' என்றான்.

பரமசிவம் அது கேட்டு மலைத்து நின்றான்.



கருத்து: **மீராநாயர்** ◆ ஓவியர்: **கௌதம் சென்**




தென் கன்னடக் கடற்கரை பனை மரங்கள் நிறைந்தது. இங்கு பாயும் உதயவர நதியின் கடை முகத்தில் மால்பே என்ற துறைமுகம் உள்ளது. இதுதான் நாட்டிலேயே மீன் உலரவைக்கும் பெரிய துறைமுகம்.

மால்பேயின் கடற்கரை அழகானது. அதற்கு மேற்கே மூன்று பாறைத் தீவுகள் உள்ளன. இதில் ஒன்றின் பெயர் தேங்காய்த்தீவு. இந்த மூன்று பாறைகளும் எரிமலை வெடிப்பால் உருவானவை எனக் கூறுகிறார்கள்.

மால்பேயுக்கு நான்கு கிலோ மீட்டர் தெற்கே உடுப்பி எனப்படும் ரஜத பீடபுரம் உள்ளது. இது ஒரு புண்ணியஸ்தலம். எழுநூறு ஆண்டுகளுக்கு முன் துவைத வேதாந்தி மத்வாச்சாரியார் இங்கு எட்டு மடங்களை நிறுவினார். இங்கு ஒரு கிருஷ்ணர் கோவில் உள்ளது. அதிலுள்ள விக்கிரகம் கனகதாசர் எண்ணும் கீழ் ஜாதிக்கார பக்தருக்காகத் திரும்பி நின்றதாம். 1550ல் பிறந்த கனகதாசர் ஒரு விஷ்ணு பக்தர். கவிஞர் குருபர் என்ற தாழ்வு சாதியைச் சேர்ந்தவர். இவரைக் கோவிலுக்குள் மட்டுமல்ல, கோவிலுக்கு வெளியே கூட நிற்க அனுமதிக்கவில்லை. அவர் தன்னால் கடவுளைப் பார்க்க முடியவில்லையே என்று வாய்விட்டுக் கதறினார். அதனால் கோவிலுக்குள் இருந்த விக்கிரகம் அவர் நின்ற திசையில் திரும்பி நின்றதாம். அப்போது கனகதாசர் அதைக் கண்டு மகிழ்ந்தாராம். அவர் அந்த விக்கிர்கத்தை ஒரு சன்னல் வழியாகப் பார்த்தாராம். அதனால் இன்றும் அந்த சன்னலுக்கு 'கனகன கிண்டி' என்ற பெயர் உள்ளது.



**ஸ்ரீமத் வாச்சாரியாரின் சிலை**

**எரிமலை வெடிப்பில் உருவான தேங்காய்த் தீவு**



**கிருஷ்ணர் கோவில், உடுப்பி**

இலட்சக்கணக்கான பக்தர்கள் இக்கோவிலுக்கு வருகிறார்கள். இரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை இங்கு நடக்கும் பர்யாயோத்சவத்தில் ஏராளமான பக்தர்கள் கூடுகிறார்கள்.

உடுப்பி ஒரு முக்கிய கல்வி மையம். வங்கித்துறையிலும் கேந்திரமாக உள்ளது.

இங்கிருந்து நான்கு கிலோ மீட்டர் தொலைவிலுள்ள உத்யவரத்தில்தான் மத்வாச்சாரியார் பிறந்தார். அவர் பிறந்த இடத்தில் அவரது உருவச் சிலை நிறுவப்பட்டுள்ளது.

உடுப்பிக்குத் தெற்கே ஜைன புனிதத் தலங்களான கர்கலாவும் முத்பிட்ரியும் உள்ளன. கர்கலாவில் 12.8 மீட்டர் உயரமுள்ள கோமடர் சிலை உள்ளது. இது கி.பி. 1432ல் நிறுவப்பட்டது. இது கர்நாடகத்தின் தலைசிறந்த சிற்பியான ரெஞ்சல் கோபால் ஷெனாயின் பிறப்பிடம். இந்த மகா சிற்பி பல பெரிய சிலைகளை கர்நாடகத்தில் மட்டுமல்லாமல் இந்தியா முழுவதிலும் நிறுவியுள்ளார்.

**ஆயிரம் தூன்கள் கொண்ட முத்பிட்ரியின் 'பஸாதி'**



முத்பிடரியை 'ஜைனர்களின் காசி' என்று கூறுகிறார்கள். இங்கு பஸாதிகள் ஏனப்படும் பதினெட்டு ஜைனக் கோவில்கள் உள்ளன. இவற்றுள் திரிபுவன திலக சூடாமணி பஸாதி என்பதுதான் மிகப் பெரியது. இங்கு பல பெரிய கல்தூண்களும், விலை மதிக்க முடியாத நவரத்தினங்கள் பதிக்கப்பட்ட ஜைனதீர்த்தங்கரர்களின் உலோக விக்கிரகங்களும் உள்ளன.

இந்த முத்பிட்ரியில்தான் 16வது நூற்றாண்டில் வாழ்ந்த கன்னடக் கவிஞர் ரத்னாகர வனி என்பவர் தம் உயரிய படைப்பான பாரத்தேசவைபவம் என்ற காவியத்தை எழுதினாராம்.

பத்தாவது நூற்றாண்டில் வாழ்ந்த ராணி மங்களா தேவியின் பெயரில் தான் மங்களூர் உருவாகியது. இது முத்பிட்ரிக்குத் தெற்கே உள்ளது. கி.பி. இரண்டாவது நூற்றாண்டிலிருந்தே இது ஒரு முக்கிய துறை முகமாக விளங்கி வருகிறது. திப்பு சுல்தான் இங்கு பட்டு நெசவுத் தொழிலுக்கு ஊக்கமளித்து இந்தியாவில் இதனை ஒரு பட்டு உற்பத்திமையமாக ஆக்கினார்.



**கோமடசிலை, கர்கலா**



**நேத்ராவதியும் குர்பூர்நதியும் சேரும் கடைமுகத்தில் அமைந்துள்ள மங்களூர்**

கர்நாடகத்தில் மங்களூர் உயர் கல்விக்கான ஒரு மையமும் ஆகும். வியாபாரத்திற்கும் தொழில்களுக்கும் பெயர் போன மங்களூர் கர்நாடகத்தின் ஒரே பெரிய துறைமுகம் ஆகும்.

தற்போது போடப்பட்டு வரும் 760 கிலோ மீட்டர் ரயில் பாதை மங்களூரையும் மும்பயியையும் இணைக்கும். இந்த ரயில் பாதை தற்போதுள்ள 41 மணி நேரப் பயணத்தை 18 மணி நேரப் பயணமாகக் குறைத்து விடும்.

தென் கர்நாடக முனை மங்களூரிலிருந்து எட்டு கிலோ மீட்டர் தெற்கிலுள்ள உள்ளலில் முடிகிறது. இதன் கடற்கரை மிக அழகானது. 17வது நூற்றாண்டில் இதனை மிகவும் துணிச்சல் மிக்க அப்பக்க தேவி ராணி ஆண்டு வந்தாள். அவள் ராணியானதும் அப்போது அப்பகுதியில் வலிமை மிக்கவர்களாக விளங்கிய போர்த்துக்கீசியர்களுக்குக் கப்பம் கட்டுவதை நிறுத்தி விட்டாள் மேலும் தம்மைத் தவிர வேறு எந்த நாட்டுடனும் வியாபாரம் செய்யக் கூடாது என்ற போர்த்துகீசியரின் தடையை மீறி அவள் அரபு நாடுகளுடன் தொடர்பு கொள்ளக் கப்பல்களை அனுப்பினாள்.

இதனால் கோபமடைந்த போர்த்துகீசியர்கள் உள்ளல் மீது படை எடுத்து வந்தார்கள். ஆனால் ராணியின் கட்டளைப்படி வீரர்கள் எதிர் தாக்குதல் நடத்தி அவர்களை விரட்டினார்கள்.

**உள்ளல் ராணி அப்பக்கதேவி போர்த்துக்கீசியரை எதிர்த்து அடைந்த மாபெரும் வெற்றி**





# பசியும் பணமும்

மோகனூர் நஞ்சை வயல்கள் நிறைந்த ஊர். அங்கு வயல்களில் வேலை செய்ய வெளியூர்களிலிருந்து பலர் வந்து கொண்டிருந்தார்கள். அவர்களுக்கும் அயலூரிலிருந்து வரும் பயணிகளுக்கும் இலவசமாக உணவு அளித்து வந்தவர் அவ்வூர் பெரிய பண்ணை அரங்கநாதன். யார் எந்த வேளையில் வந்து அவர் வீட்டுக் கதவைத் தட்டினாலும் அவர் வந்தவருக்கு உணவு அளித்து உபசரிப்பது வழக்கம். அதனால் அவருக்கு அன்ன தான அரங்கநாதன் என்ற பெயர் ஏற்பட்டு விட்டது.

தம் வீட்டிற்கு வருபவர்களை ஏழை பணக்காரன் என்றோ முதலாளி தொழிலாளி என்றோ வித்தியாசம் பாராட்டாமல் எல்லோரையும் சமமாக பாவித்து ஒரே மாதிரியான உணவைத்தான் அவர் அளித்து வந்தார்.

ஒருநாள் மெய்யப்பன் என்ற பணக்காரன் தன் வண்டியில் அந்த ஊருக்கு வந்தான். அப்போது இரவு வெகு நேரமாகி விட்டது. அவ்வூரில் தங்க சத்திரம் எதாவது இருக்குமா என்று தன் வண்டிக்காரனை விட்டு விசாரித்தான். அப்போது ஒருவன் ''இந்த ஊரில் சத்திரமே கிடையாது. அதுதான் அன்ன தான அரங்கநாதன் இருக்கிறாரே. அவர் யார் வந்தாலும் சாப்பாடு போட்டுத் தங்க இடமும் கொடுப்பார்'' என்றான்.

மெய்யப்பன் தன் வண்டியில் போய் அரங்கநாதனின் வீட்டை அடைந்தான். வீட்டுக் கதவு சாத்தப்பட்டிருந்தது. ஆனால் வாசல் திண்ணையில் ஒரு நாற்காலி இருந்தது. மெய்யப்பன் வண்டியிலிருந்து இறங்கிப் போய் அந்த நாற்காலியில் உட்கார்ந்து கொண்டான்.

ஓரிரு நிமிடங்களுக்குப் பின் அரங்கநாதன் கதவைத் திறந்து கொண்டு வந்தார். அப்போது மெய்யப்பன் கம்பீரமாக ''நீர்தான் அரங்க

—சங்கர சுவாமிநாதன்—



நாதனா? எனக்கு நல்ல சாப்பாடு வேண்டும், அப்பளம், இரண்டு கூட்டு, இரண்டு கறி, பச்சடி, கட்டித் தயிர் என்றெல்லாம் அதில் இருக்க வேண்டும். இதற்கு என்ன பணம் வேண்டுமானாலும் கொடுக்கிறேன். சாப்பாடு மட்டும் என் அந்தஸ்த்திற்கு ஏற்ப இருக்க வேண்டும்'' என்று அவரைப் பார்த்து அலட்சியமாகக் கூறினான்.

அந்தப் பணக்காரனின் பேச்சு அரங்கநாதனுக்கு எரிச்சலை மூட்டி னாலும் அதை வெளிக் காட்டாமல் அவர் ''இங்கு ஏழைக்கு ஒரு உணவு, பணக்காரருக்கு ஒரு உணவு என்று கிடையாது. உணவுக்கு விலையும் கிடையாது. யார் எப்போது வந்தா லும் அவருக்கு உணவு கிடைக்கும், பசியில் ஏழையின் பசி என்றும் பணக் காரனின் பசி என்றும் கிடையாது. பசி எல்லோருக்கும் ஒன்றுதான். என் வீட்டில் எல்லோரும் ஒரே வரிசையில் தான் அமர்ந்து சாப்பிட வேண்டும், நீங் களும் உங்கள் வண்டிக்காரனும் சாப் பிட வரலாம், இதை நான் மக்களுக்குச் செய்யும் ஒரு பணியாகக் கருதியே செய்து வருகிறேன்'' என்றார்.

அதைக் கேட்ட மெய்யப்பன் அவரை வணங்கி ''ஐயா! என்னை மன்னித்து விடுங்கள் நீங்கள் மிகவும் உயர்ந்தவர். இதை அறியாமல் நான் ஆணவமாகப் பேசிவிட்டேன். நான் என் வண்டிக்காரனுடன் சேர்ந்து உட் கார்ந்தே நீங்கள் அளிக்கும் உணவை மகிழ்ச்சியுடன் உண்கிறேன்'' என்று கூறினான்.

அதன்பின் மெய்யப்பன் அங்கே சாப்பிட்டு அன்றிரவு அந்த வீட்டி லேயே தங்கினான். மறுநாள் காலை அவன் அரங்கநாதனிடம் விடை பெற்றுக் கொண்டு தன் வண்டியில் அமர, வண்டிக்காரன் அதனை ஓட்டிச் சென்றான். வண்டி ஊரைவிட்டு சற்று தூரமுள்ள ஆற்றங்கரையை அடைந் தது. அப்போது வண்டிக்காரன் திடீ ரென மெய்யப்பன் மீது பாய்ந்து அவனைத் தாக்கி ஆற்று வெள்ளத்தில் தள்ளினான். மெய்யப்பன் ஆற்றில் மூழ்கி இறந்தான். வண்டிக்காரன் மெய்யப்பன் கொண்டு வந்திருந்த பணத்தை எடுத்துக் கொண்டு அருகே யிருந்த காட்டூருக்குப் போய் அங்கு மெய்யப்பனிடமிருந்து திருடிய பணத்தைக் கொண்டு வியாபாரம் செய்யலானான். ஒரு சில வருடங் களில் அந்த வண்டிக்காரன் அந்த நகரத்தின் பிரபல வியாபாரிகளில் ஒரு

வனாக ஆகிவிட்டான்.

ஆனால் அவன் மனம் மெய்யப்ப னுக்குச் செய்த துரோகத்தை எண்ணி வேதனைப்பட்டது. அதனால் அவன் தினமும் இரண்டு ஏழைகளுக்குச்சாப் பாடு போட்டுப் பரிகாரம் செய்து புண்ணியம் சம்பாதித்தாக எண்ணி ஆறுதல் அடையலானான்.

இப்படி இருக்கையில் ஆற்றில் சாக டிக்கப்பட்ட மெய்யப்பன் பிசாசாக மாறினான், அந்தப் பிசாசு வண்டிக் காரனைப் பழி வாங்க எண்ணியது. அது காட்டூருக்குப் போய் வண்டிக் காரன் கப்பல் போன்ற மாளிகையில் சுக போகத்துடன் வாழ்வதைக் கண்டு ஆத்திரம் கொண்டது. அப்போது அவன் பகட்டான ஆடைகளை அணிந்து கொண்டு அவ்வூர் ஜமீன் தாரர் கூட்டிய தர்பாருக்குச் சென்று கொண்டிருந்தான். அன்று அங்கு உலகில் பிசாசு இருக்கிறதா அல்லது இல்லையா என்ற தலைப்பில் ஒரு பட்டிமன்றம் நடக்க இருந்தது.

பிசாசும் வண்டிக்கார வியா பாரியை பின் தொடர்ந்து ஜமீன்தார ரின் தர்பாருக்குச் சென்றது. அங்கு பட்டி மன்றத்தில் காரசாரமாக விவா தம் நடந்து கொண்டிருந்த போது பிசாசு வண்டிக்கார வியாபாரியைப் பிடித்துக் கொண்டது. அதனால் அவன் திடீரென எழுந்து ''யார் பிசாசு இல்லை என்று சொல்வது? இதோ பிசாசாகிய நான் வந்திருக்கிறேன். நான் இவனைப் பிடித்துக் கொண்டி ருக்கிறேன். உங்களால் முடியுமானால் இவனை என்னிடமிருந்து விடுவியுங் கள் பார்க்கலாம்'' என்று உரக்கக் கூவி சவால் விட்டது.



முதலில் இது சபையோருக்கு ஏதோ ஒரு வேடிக்கை போல இருந் தது. ஆனால் சற்று நேரத்துள் எல்லோ ரையும் பயம்பிடித்துக் கொண்டது. உண்மையிலேயே அந்த வியாபாரி யைப் பிசாசுதான் பிடித்துக் கொண்டி ருக்கிறது என்று எல்லோருக்கும் தெரிந்து போயிற்று. ஜமீன்தாரரும் மற்றவர்களும் மிகவும் பயந்து போனார்கள். உடனே ஒரு மாந்திரீ கனை வரவழைத்தார்கள். அவனும் சக்கரம் போட்டு மெய்யப்பன் பிசா சுடன் பேசி அந்த வண்டிக்கார வியா பாரி செய்த துரோகத்தைத் தெரிந்து கொண்டான்.

அவன் அப்பிசாசிடம் ''பிசாசே! நடந்தது என்னவோ நடந்து விட்டது. இவனை நாங்கள் கடுமையாக தண் டிக்கிறோம். நீ இவனை விட்டுப்

போய்விடு'' என்றான். பிசாசோ பலமாகச் சிரித்து ''இக்கயவனின் உடல் எனக்குத் தேவை இல்லை. நான் இந்தப் பிசாசின் உருவிலிருந்து விடுதலை பெற வேண்டும். அதற்கு அந்த அன்னதான அரங்கநாதன் இங்கு வந்து இவனுக்கு உணவு போட்டதால் கிடைத்த புண்ணியத்தை எனக்குக் கொடுத்து விட வேண்டும்'' என்றது.

மோகனூரிலிருந்து அன்னதான அரங்கநாதனை ஜமீன்தாரரின் தர்பாருக்கு அழைத்து வந்தார்கள். அவரைக் கண்டதுமே பிசாசு மிகவும் பணிவுடன் வணங்கி ''ஐயா! நீங்கள் என்னையும் என் வண்டிக்காரனையும் சமமாக நடத்தி உணவளித்து உபசரித்தது சரியானதுதான் என்று எல்லோருக்கும் நிரூபிக்க வேண்டும். இவனுக்கு நீங்கள் உணவளித்ததால் கிடைத்த புண்ணியத்தை எனக்குக் கொடுத்து என்னை இந்தப் பிசாசு உருவத்திலிருந்து விடுவிக்க வேண்டும்'' என்று வேண்டிக் கொண்டது.

அதைக் கேட்ட அரங்கநாதன் ''நான் அன்னதானம் புண்ணியம் கிடைக்கும் என்பதற்காகச் செய்யவில்லை. எவ்விதப் பலனையும் எதிர்பாராமல்தான் செய்து வருகிறேன். பசி என வருபவன் ஏழையா பணக்காரனா என்றெல்லாம் பாராமல் உணவை அளிக்கிறேன் அவ்வளவுதான். அதனால் நீ நினைப்பது போலப் புண்ணியம் எதுவும் என்னிடம் இல்லை'' என்றார்.

பிசாசும் அவரை வணங்கி ''உத்தமரே! உங்கள் பெருமையை இன்று இந்த என் வண்டிக்காரனால் உலகமே அறிந்தது. இனி இவனை விட்டுப் போய் விடுகிறேன்'' என்று கூறி விட்டு வண்டிக்கார வியாபாரியை விட்டுச் சென்றது. பிசாசு அவனை விட்டதும் அந்த வியாபாரி குப்புற விழுந்தான். சற்று நேரத்திற்குப் பின் அவன் கண் விழித்துப் பார்த்தான். பிறகு அவன் நடந்ததை எல்லாம் தெரிந்து கொண்டு அவமானத்தால் தலை குனிந்து கொண்டான்.

அவன் தன் பணத்தை எல்லாம் ஜமீன்தாரரிடம் கொடுத்து விட்டு அன்னதான அரங்கநாதனுடன் மோகனூருக்குச் சென்றான். அங்கு அவருக்கு எல்லா விதத்திலும் உதவி புரிந்து அவரது பணியாள் போல அவரிடம் இருந்து விட்டான்.



# பொன்மயமான பொழுதுகள்



## பத்து மண்டையோடுகள்

கோசலநாட்டில் மழை இல்லாமல் பஞ்சம் ஏற்படவே, ஆதித்த மன்னன் கபால முனிவரின் உதவியை நாடிச் சென்றான்
















# பொன்மயமான பொழுதுகள் பற்றிய வினாக்கள்



**1**

புத்தர் கோசல நாட்டின் ஒரு காட்டுப் பகுதியில் போய்க் கொண்டிருந்த போது அவரை அங்குலிமாலன் என்ற வழிப்பறிக் கொள்ளைக்காரன் வழி மறித்தான். புத்தரைக் கொன்று அவரது கை கட்டை விரலை வெட்டி எடுத்து தான் அணியும் கட்டை விரல் மாலையில் அதனைக் கோர்க்க அவன் எண்ணினான். ஆனால் புத்தர் அவனது தவறை உணர்த்தி அவனை நல்லவனாக்கினார். அவனும் ஒரு சாதுவாகி விட்டான்.

இக்கொள்ளைக்காரன் அங்குலிமாலன் என்ற பெயரைப்பெறுமுன் அவனுக்குஇருந்த பெயர் என்ன?



**2**

லண்டனில் விக்டோரியா-ஆல்பர்ட் மியூசியத்தில் மரத்தாலான ஒரு புலி பொம்மை உள்ளது. அது ஒரு வீரனைக் கொல்வது போலுள்ளது. அங்குள்ள ஒரு கைப்பிடியைத் திருகினால் அந்தப் புலி உறுமும். அந்த வீரன் தன் கையை உயர்த்தி பரிதாபத்துடன் முனகுவான். யார் இந்த பொம்மைப் புலியைச் செய்தவர்?

**3**

ஆஸ்திரேலியாவில் குடியேறிய போது ஐரோப்பியர்கள் தம்மோடு ஒரு பிராணியை எடுத்துச் சென்றனர். அது தற்போது வயல்களிலுள்ள புல்லை நாசப்படுத்தி ஆடு மாடுகளுக்கு புல் கிடைக்காமல் செய்து தொல்லை கொடுத்து வருகிறது. அதனால் அந்தப் பிராணி தம் வயல்களில் நுழையாதிருக்கக் குடியானவர்கள் உயரமான வேலிகளைப் போட்டிருக்கிறார்கள். இந்த பயங்கரமான பிராணியின் பெயர் என்ன?



ஒரு மேஜையின் டிராயரில் 12 'சாக்ஸ்' உள்ளன. இவற்றில் ஆறு வெள்ளை. ஆறு கருப்பு. அந்த அறை மின் தடையால் வெளிச்சம் இல்லாமல் இருட்டாகி விடுகிறது. ஒரு ஜோடி வெள்ளையோ அல்லது கருப்பு நிற 'சாக்ஸ்' எடுக்க அப்போது நீங்கள் எவ்வளவு சாக்ஸ் எடுப்பீர்கள்?



4





5

சோமனின் படகு கரையை அடைந்த போது அவன் ஒரு யானையைக் கண்டான். அதன் சொந்தக்காரனை சோமன் அறிவான். சோமன் அவனிடம் அந்த யானையின் எடை எவ் வளவு என்று கேட்டான். யானைக்காரனோ அது தனக்குத் தெரியாது என்றும் அதை சோமன் கூறிவிட்டால் சோமன் ஒருமுறை அந்த யானை மீது அமர்ந்து இலவச சவாரி செய்யலாம் என்று கூறினான். சோமனிடம் ஒரு தடவையில் 50 கிலோ கிராம் நிறுக்க ஒரு யந்திரம் மட்டுமே இருந்தது. அவன் யானையை எப்படி எடை போட்டான்?

6

ஒரு கொல்லன் எட்டு பீரங்கி குண்டுகள் செய்தான். அவற்றில் ஏழு பார்க்க ஒன்று போலவும் எடையில் சமமாகவும் இருந்தன. எட்டாவது குண்டு மற்றவற்றை விட சற்று எடை குறைந்து இருந்தது. உங்களிடம் ஒரு தராசைக் கொடுத்து இரண்டு தடவை மட்டுமே நிறுத்து அந்த குண்டின் எடையைக் கண்டு பிடித்துக் கூற வேண்டும் என்றால் நீங்கள் என்ன செய்வீர்கள்



7

எகிப்தில் யாராவது இறந்து விட்டால் அவனது கைகளில் வெள்ளி, வெண்கல நாணயங்களை வைத்து அந்த உடலைப் புதைப்பது பழங்கால வழக்கமாம். இது ஏன்?

## 'திடீர்' வாழ்த்து மடல் அனுப்புங்கள்




ஒரு கெட்டி அட்டை 12 செ.மீ × 8 செ.மீ அளவிற்கு எடுத்து அதில் படத்தில் காட்டியபடி மத்தி வரை 3 மி.மீ அகல நீள ஓட்டை செய்யுங்கள்




மற்றொரு அட்டையை 6 செ.மீ × 8 செ.மீ அளவில் எடுத்து மத்தியில் கதவு போல் டேப்பால் ஒட்டுங்கள்




ஒட்டப்பட்ட அட்டையை மடித்து நீள ஓட்டையில் ஒரு ரப்பர் பாண்ட் போட்டு இழுந்து அட்டையின் மறு பகுதியைச் சுற்றி இருக்கச் செய்யுங்கள். இது மிக இறுக்கமாகவோ தளர்ந்தோ இருக்கக் கூடாது




இதில் இரு காகிதத் துண்டுகளை ஒட்டவும். காகிதங்கள் ரப்பர் பேண்டை ஒட்டக் கூடாது. அவற்றில் தேவையான வாசகங்களை எழுதவும்.




எதாவது ஒரு வாழ்த்து மடலை சற்றுத் பெரிதாகத் தயாரித்து அதனை படத்தில் காட்டிய படி ஒட்டவும்.




இப்போது இதனை மடக்கி ஒரு உறைக்குள் போட்டு உங்கள் நண்பருக்கு அனுப்புங்கள். இது அவர்களை வியப்படையச் செய்யும்.






## ஒரு வேன் வரையுங்கள் மூன்று எளிய வழிகளில்










துச்சாதனனின் தூண்டுதலின் பேரில் துரியோதனன் தன் தந்தை திருதராஷ்டிரானைக் கண்டு ''தந்தையே! சூதாட்டத்தில் நான் வென்றதை எல்லாம் நீங்கள் பாண்டவர்களுக்குத் திருப்பிக் கொடுத்து விட்டீர்கள். இனி அவர்களது பலம் அதிகரிக்கும். போரில் நம்மைத் தோற்கடித்து விடுவார்கள். அதனால் அவர்களை மறுபடியும் சூதாட்டத்திற்கு அழைத்து நாம் கொடுத்ததை எல்லாம் திரும்ப எடுத்துக் கொள்ள வேண்டும். இம்முறை பந்தயம் பனிரெண்டு வருட வனவாசம். இந்தக் காலத்தில் நாம் பல அரசர்களை நம்முடன் சேர்த்துக் கொண்டு நம் படைபலத்தை அதிகரித்துக் கொள்ளலாம்'' என்றான்.

திருதராஷ்டிரன் தன் சம்மதியை அளித்தான். பீஷ்மரும் துரோணரும் விதுரனும் இதனை எதிர்த்தனர். காந்தாரி கூட இதனால் கௌரவவம்சமே அழியும் என்று சொல்லிப் பார்த்தாள் திருதராஷ்டிரனோ துரியோதனன் மீது கொண்ட பாசத்தால் அவர்கள் கூறியதை ஏற்கவில்லை. பாண்டவர் சூதாட்டத்திற்கு அழைக்கப்பட்டனர்.

தருமர் அரசர்களின் சம்பிரதாயத்தின் படி அந்த அழைப்பை ஏற்றுத் தன் தம்பிகளுடனும் குடும்பத்தவருடனும் ஹஸ்தினாபுரத்திற்குச் சென்றார். சூதாட்டம் தொடங்கு முன் சகுனி ''இம்முறை பந்தயம் பனிரெண்டு வருட வனவாசம். ஒரு வருட அஞ்ஞாத வாசம். ஆட்டத்தில் தோற்றவர் இதனை மேற்கொள்ள வேண்டும். அஞ்ஞாத வாசத்தின் போது அவர் கண்டுபிடிக்கப்பட்டால் மீண்டும் அதே பனிரெண்டு வருஷ வனவாசமும் ஒரு வருட அஞ்ஞாத வாசமும். இந்த வனவாச காலம் முடிந்ததும் அவர் தம் நாட்டைத் திரும்பப் பெறலாம்'' என்றான்.

—பாண்டவ வனவாசம்—



இதைக் கேட்டு சபையோர் பலர் ஆத்திரம் கொண்டு திருதராஷ்டிரன் ஏன் இப்படிச் செய்கிறான் என்று கூறினார்கள். தருமரோ ''நான் சம்பிரதாயம், முறை ஆகியவற்றின்படி நடக்க வேண்டும். சூதாட்டத்தில் ஏமாற்றப்பட்டாலும் நான் ஆட்டத்தில் கலந்து கொண்டே ஆக வேண்டும்'' என்று கூறி சூதாட உட்கார்ந்தார். ஆட்டத்தில் சகுனிதான் வெற்றி பெற்றான்.

பந்தயப் படி தருமர் தம் ஆட்சியை விட்டு வனவாசத்தை மேற்கொண்டார். பாண்டவர்களும் துரௌபதியும் மரவுரிகள் அணிந்து கானகத்திற்குச் செல்லத் தயாரானார்கள். அவர்களைக் கேலி செய்தவாறே துச்சாதனன் ''இப்போதுதான் என் மனம் குளிர்ந்தது! இனி ஆட்சி எங்களுடையதே. துரௌபதி! நீ ஏன் அவர்களோடு போய்க் காட்டில் கஷ்டப்பட வேண்டும்? எங்களோடு அரண்மனையில் சுகமாக இருக்கலாமே'' என்று கூறினான்.

அதைக் கேட்ட பீமன் கடுங் கோபம் கொண்டு ''அடே! சகுனியைக் கொண்டு ஏமாற்று வேலைகள் செய்து ஆட்டத்தில் வெற்றி பெற்றதற்காகத் தலைகால் தெரியாமல் துள்ளுகிறாயா? உன்னைப் போரில் நார் நாராகக் கிழித்துப் போடும் போது உனக்கு எந்த சகுனி வந்து உதவப் போகிறான் என்று பார்க்கிறேன் உன்னை நான் தான் போரில் கொல்லப் போகிறேன். இது சத்தியம்'' என்று யாவரும் கேட் இடி முழக்கம் செய்தான்.

பிறகு அவன் ''அடே துரியோதனா இப்போது நீ வெற்றி மிதப்பில் இருக்கிறாய். நடக்கப் போகும் போரில் உன்னைக் கொல்பவன் நான்தான். இதை நினைவில் வைத்துக் கொள்'' என்று பலமாகக் கத்தினான்.

பாண்டவர்கள் அங்கிருந்து கிளம்பும் போது கூட பீமன் பின்னால் திரும்பி பார்த்து ''எல்லோரும் இதை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். போரில் இந்த மாபெரும் பாவியான துரியோதனனை நான் கொல்லத்தான் போகிறேன். இவனது உயிருக்கு உயிரான தோழன் கர்ணனை என் தம்பி அர்ஜுனன் கொல்வான். இந்த சகுனியை சகாதேவன் கொல்வான். நான்கு நயவஞ்சகர்களான இவர்களின் அழிவு எங்களால் தான் ஏற்படும் என்று விதி எழுதி விட்டது. அதை யாராலும் மாற்ற முடியாது'' என்றான்.

சகாதேவன் சகுனியைப் பார்த்து ''அடே வஞ்சகா! போர் என்பது சூதாட்டத்தில் காய்களை உருட்டி ஏமாற்றுவது அல்ல. அங்கு உன் பலத்தைக் காட்டிட வேண்டும். என் தமையனார் கூறியபடி போரில் நான்தான் உன்னைக் கொல்லப் போகிறேன். அதனால் போர் மூள்வதற்குள் நீ அனுபவிக்க வேண்டியதை எல்லாம் அனுபவித்து விடு'' என்றான்.



நகுலனும் ''அடே அற்பர்களே துரௌபதியைச் சபை நடுவே அவமானப்படுத்திய உங்களை லேசில் விட மாட்டோம். உங்களை எல்லாம் போரில் ஒழித்துக் கட்டுவோம்'' என்றான். இப்படியாகப் பாண்டவர்கள் எல்லோரும் சபதம் செய்தனர். பிறகு அவர்கள் பீஷ்மர், துரோணர், விதுரர், திருதராஷ்டிரன் ஆகியோரிடம் விடை பெற்றுக் கொண்டு அங்கிருந்து சென்றார்கள்.

நய வஞ்சகர்கள் நால்வருக்கு பயந்து அங்கிருந்த யாரும் எதுவும் பேசவில்லை. ஆனால் விதுரர் மட்டும் தருமரிடம் ''மோசத்தால் தோற்கடிக்கப்பட்டவன் அத்தோல்வி பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை. உனக்கு மணி மணியான சகோதரர்களும், புத்திசாலியான மனைவி திரௌபதியும் சிறந்த மாபெரும் மேதையான தௌம்யரும் உன்னோடு இருக்கும் போது நீ எதற்குமே கவலைப்பட வேண்டியதில்லை. ஒற்றுமையாக உள்ள உங்களை யாராலும் பிரிக்க முடியாது. உங்களை யாராலும் வெல்லவும் முடியாது. உங்கள் தாயாருக்கு வயதாகி விட்டது. அதனால் அவள் உங்களோடு கானகத்திற்கு வர இயலாது. ஆகையால் அவளை என் வீட்டிற்கு அழைத்துச் செல்கிறேன். அவளை நன்கு கவனித்துக் கொள்கிறேன். நீ கானக வாசத்தை முடித்துக் கொண்டு வா. உனக்கு எல்லா விதத்திலும் நன்மையே ஏற்படட்டும்'' என்று கூறினார்.

தருமரும் விதுரரிடம் ''நீங்கள் எங்களுக்குத் தந்தைக்கு சமமானவர். அறிவுரைகள் கூறும் ஆசிரியருக்குச் சமமானவர். எப்போதும் எங்கள் நன்மையையே விரும்புபவர். நீங்கள் கூறியபடியே நாங்கள் நடக்கிறோம்'' என்றார். துரௌபதியும் அந்தப்புரத்திலுள்ளவர்களிடம் விடை பெற்றுக் கொண்டாள்.

அவள் கானகத்திற்குச் செல்வதாகக் கூறியதும் குந்தி அவளிடம் ''உனக்கே எல்லாம் தெரியும். கணவனோடு

மனைவி பிரியாமல் இருப்பதுதான் முறை. நீ மட்டும் கோபம் கொண்டு கௌரவர்களைப் பார்த்திருந்தால் அவர்கள் எரிந்து சாம்பலாகி இருப் பார்கள். சகாதேவன் எல்லோரிலும் சிறியவன். அவனை நீ நன்கு கவனித் துக்கொள். சத்தியமே வெற்றி பெறும். நீ போய் வா'' என்றான்.

விரித்த தலையாய் மரவுரி அணிந்த அவள் கண்களில் கண்ணீர் வடியக் குந்தியைப் பார்த்தவாறே அங்கிருந்து சென்றாள். குந்தி தேவியும் தன் புதல் வர்களைப் பார்க்க அவள் பின்னாலே சென்றாள், அவர்களும் மரவுரிகள் அணிந்து கானகத்திற்குச் செல்லத் தயாராக நின்று கொண்டிருந்தார்கள். அந்தக் கோலத்தில் தன் புதல்வர் களைக் கண்டதும் குந்தி தேவியின் கண்களில் நீர் நிரம்பியது. அவள் ''நீங் கள் நேர்மையைக் கடைப் பிடித்து நல்வழியில் சென்ற போதிலும் உங் களுக்கு வனவாசம் கிடைத்திருக் கிறது. ஏனோ விதி நமக்கு நேர்மாறா கச் செயல்படுகிறது. காட்டில் போய் நீங்கள் எப்படித்தான் இருக்கப் போகிறீர்களோ? இந்த மாதிரியான கஷ்ட காலத்தில் கிருஷ்ணர் கூட உத வாமல் இருக்கிறாரே'' என்று பல வாறாகப் புலம்பலானாள்.

அவள் சகாதேவனிடம் ''நீ காட் டிற்கு இவர்களோடு போகாதே. நீ என்னோடு இருந்தால் என் எல்லா மகன்களும் என்னோடு இருப்பது போல நான் நினைத்துக் கொள்வேன்'' என்றாள். அவளால் துக்கத்தை அடக்க முடியவில்லை. விதுரர் அவளை ஒரு வாறு சமாதானப்படுத்தித் தன் வீட் டிற்கு அழைத்துச் சென்றார்.

பாண்டவர்கள் குந்தி தேவியை வணங்கி விதுரருடன் அனுப்பிய பின் கானகத்தை நோக்கிச் சென்றார்கள். துரௌபதியும் தலையை விரித்த படியே அவர்களின் பின்னால் சென் றாள். தருமர் தன் முகத்தை துணியால்



மூடி மறைத்துக் கொண்டு சென்றார். பீமன் தன் தோள்களை அகல விரித்துக் கொண்டு சென்றான். அர்ஜுனன் மணலை இறைத்துக் கொண்டே சென்றான். நகுலன் தன் உடல் முழுவதிலும் சாம்பலைப் பூசிக் கொண்டும் சகாதேவன் உடலில் மண்ணைப் பூசிக் கொண்டும் சென்றனர். தௌம்யர் அவர்களுக்கு முன் நடந்தவாறே. ரௌத்திர யாம்ய சாம கானம் செய்து கொண்டே நடந்தார்.

திருதராஷ்டிரன் விதுரரை அழைத்து ''பாண்டவர்கள் வனவாசம் செய்யப் போன விதம் எப்படி?'' என்று கேட்டான். விதுரரும் அவர்கள் சென்ற விதத்தை விவரித்துக் கூறினார். அப்போது திருதராஷ்டிரன் ''அவர்கள் ஏன் அப்படிப் போனார்கள்?'' என்று கேட்டான்.

விதுரரும் ''உம் புதல்வர்கள் செய்த கொடுமைகளால் கோபம் கொண்ட தருமன். தன் பார்வையால் மக்கள் எரிந்து போய் விடக் கூடாதே என்று தான் தன் முகத்தை நன்கு மறைத்துக் கொண்டு போனான். பீமன் உலகத்தவருக்குத் தன் வலிமையைக் காட்டவே தோள்களை அகல விரித்துக் கொண்டு சென்றான். அர்ஜுனன் மணலை இறைப்பது போல அம்புகளை எய்பவன் என்பது பொருள். நகுலன் தான் சுக வாழ்வு வாழாமல் கஷ்டப்படுவதைக் குறிக்கவே உடல் முழுவதும் சாம்பல் பூசிக் கொண்டு சென்றான். தன் துக்கத்தை மறைக்க சகாதேவன் மண்ணைப் பூசிக் கொண்டு சென்றான். துரௌபதி தலைவிரி கோலமாகப் போனது பதிமூன்று வருடங்களுக்குப் பிறகு உம் மருமகள்கள் அடையப் போகும் நிலையைக் குறிக்கத்தான்'' என்று கூறி சற்று நிறுத்தினார்.

அப்போது திருதாஷ்டிரன் ''இன்னமும் என்ன சொல்லப் போகிறாய்?'' என்று கேட்டான். விதுரரும் ''தௌம்





மாட்டேன். பாண்டவர்கள் வனவாச முடிவில் போருக்குத் தயாராகத் தான் வரப் போகிறார்கள். என்னிடம் தோற்றுப் போன துருபதன் ஒரு யாகம் செய்து என்னைக் கொல்ல சக்தி பெற்ற ஒரு மகனையும் அர்ஜுனனை மணக்கத் தக்க மகளையும் அடைந்தான். துரௌபதியைப் அர்ஜுனன் மணந்ததால் திருஷ்டத்யும்னன் அவர்களுக்குப் பக்க பலமாக இருப்பவன். அர்ஜுனனுக்குச் சமமாக உலகில் எந்த வீரனும் இல்லை. எனக்கு மரணம் திருஷ்டத்யும்னனால் தான் என்பதை எல்லோரும் அறிவார்கள். இனி நிகழப் போவதற்கு நீங்கள் எல்லாம் தான் காரணம். எனக்கு எந்த நாடும் வேண்டாம் நான் ஆட்சி புரியவும் வேண்டாம். இனியாவது நீங்கள் மற்றவர்களுக்குக் கெடுதல் செய்யாமல் நல்லதே செய்யுங்கள். அப்படிச் செயல்படாவிட்டால் இனி வரும் பதிமூன்று ஆண்டுகளில் நீங்கள் அனுபவிக்கப் போகும் சுகம்தான் கடைசியாக இருக்கும். அதற்கு பிறகு கௌரவ வம்சமே இராது'' என்று கூறினார்.

துரோணர் இவ்வாறு நயவஞ்சகர்கள் நால்வரிடம் கூறியதை திருதராஷ்டிரன் கேள்விப்பட்டான். அவன் விதுரனிடம் ''விதுரா! துரோணாசாரியார் கூறியதெல்லாம் உண்மையே. நீ இப்போதே காட்டிற்குப் போய்ப் பாண்டவர்களை அழைத்துக் கொண்டு வந்து விடு. ஒருவேளை அவர்கள் வர முடியாது என்று கூறினால் நான் அவர்களுக்கு சில பரிசுகளை அளிக்கப் போவதாகக் கூறி அவர்களை நீ எப்படியாவது அழைத்துக் கொண்டு வந்து விடு'' என்று

யர் கூறிய மந்திரங்கள் போரில் இறக்கப் போகிறவர்களின் உத்திரக்கிரியைகளுக்கானவை. இவ்வளவுக்கும் காரணம் நீங்கள் சரியாக யோசித்துச் செயல்படாததுதான்'' என்றார்.

பாண்டவர்கள் வனவாசத்திற்குச் சென்றபின் துரியோதனன் துச்சாதனன், கர்ணன், சகுனி ஆகிய நான்கு நயவஞ்சகர்களும் துரோணரிடம் போய் ''ஐயா! பாண்டவர்களிடமிருந்து சூதாட்டத்தில் வென்று நாங்கள் அடைந்த நாட்டை நீங்கள் ஆண்டு வாருங்கள். நீங்கள்தான் அதற்கு ஏற்றவர்'' என்று கூறினார்கள்.

அதைக் கேட்ட துரோணர் ''பாண்டவர்களைச் சூதாட்டத்தில் வென்றாலும் போரில் யாராலும் வெல்ல முடியாது. அதற்காக நான் கௌரவர்களை விட்டுப் போய் விட

கூறினான்.

அப்போது சஞ்சயன் குறுக்கிட்டு ''அரசே! இந்த நாட்டை விஸ்தரித்து ஜெயித்து உங்களுக்குக் கொடுத்தது யார்? பாண்டு மன்னர்தானே. அதற்கு நன்றி செலுத்தாமல் அவரது புதல்வர்களை சூதாட்டத்தில் ஏமாற்றி அவர்களது நாட்டைப் பறித்துக் கொண்டு அவர்களைக் காட்டிற்கும் அனுப்பி விட்டீர்களே. அவர்களும் எல்லாவற்றையும் இழந்து விட்டுக் கானகம் சென்று விட்டார்கள். இப்போது மீண்டும் அவர்களை இங்கே வரவழைத்து என்ன செய்யப் போகிறீர்கள்? உங்களுக்குக் கிடைக்க வேண்டியதெல்லாம் தான் கிடைத்து விட்டதே'' என்றான்.

திருதராஷ்டிரனும் ''பாண்டவர்களை என்ன செய்ய முடியும்? அவர்கள் மாபெரும் வீரர்கள். போர் முறைகளை நன்கு அறிந்தவர்கள். அவர்களை யாராலும் வெல்லவும் முடியாது. இப்படிப்பட்டவர்களை நான் என்ன செய்து விடப் போகிறேன்'' என்றான்.

சஞ்சயனும் ''இந்த நிலையை உருவாக்கியவர் யார்? நீங்களே. முதியவர் பீஷ்மர், ஆச்சாரியார் துரோணர், அமைச்சர் விதுரர் ஆகியோர் தடுத்தும் நீங்கள் கேட்கவில்லை உங்கள் புதல்வர்களுக்கு அறிவில்லை. வெட்கமில்லை. வீட்டுக்கு விலக்காக இருந்த துரௌபதியை சபைக்கு வரவழைத்து அவர்கள் அவளது ஆடையைக் களைய முயன்று அவமானப் படுத்த முயன்றவர்கள் அவர்கள், இந்தப் படுமோசமான செயல்தான் உங்கள் வம்சத்தையே அழிப்பதற்குக் காரணமாகப் போகிறது. நாசகாலம் வரும்போது நற்புத்தி அகன்று விடுகிறது. அரசன் அன்று கொல்வான். ஆனால் தெய்வம் நின்று கொல்லும். விதி யாரைவிட்டது? உங்களுக்கும் இனி நாசகாலமேதான்'' என்றான்.

திருதராஷ்டிரனும் ''சஞ்சயா! நீ சொல்வது சரியே. புத்திர பாசத்தால் மதி மயங்கிவிட்டேன். அறிஞர்களும் முதியோரும் கூறிய அறிவுரைகளைப் புறக்கணித்து விட்டு என் மகன் ஆட்டி வைத்தபடி எல்லாம் ஆடினேன். நடந்தது நடந்து விட்டது. இனி கடவுள்தான் எங்களைக் காப்பாற்ற வேண்டும்'' என்றான்.



# புங்க மரம்

மும்பயிக்கு அருகே கரஞ்சியா என்று ஒரு தீவு உள்ளது. அங்கு பெரும் அளவில் காணப்படுபவை புங்க மரங்களே. புங்க மரத்தை மராட்டி மொழியில் காரஞ்சி என்ற கூறுகிறார்கள். ஹிந்தியிலும், குஜராத்தி மொழியிலும் கூட இம் மரத்தை இதே பெயரில்தான் குறிப் பிடுகிறார்கள். எனவே இம்மரங்கள் நிறைந்த அத்தீவிற்குக் கரஞ்சியாத் தீவு என்ற பெயர் ஏற்பட்டது.

கடற்கரை ஓரப் பகுதிகளில் இம் மரங்கள் நிறைய வளர்கின்றன. மணற் பாங்கான ஆற்றோரங்களி லும் கால்வாய்க் கரைகளிலும் இவற்றைக் காணலாம். இதன் கிளைகள் பரந்து விரிந்து வளர் கின்றன. மரப் பட்டை சொர சொரப் பாக இருக்கும். இம்மரம் வருடம் முழுவதும் பசுமையாகவே தென் படும். இலைகளும் இலைப்பச்சை நிறத்தில் சிறு கிளைகளில் 5, 7, 9 என இருக்கும். மரபீரோக்களைக் கறை யான் அரிக்காதிருக்க இதன் உலர்ந்த இலைகளை அவற்றுள் போட்டு வைக்கிறார்கள்.

இதன் மலர்கள் இளம் சிவந்த ஊதா நிறக் கோடுகளோடு வெள்ளையாக இருக்கும். ஏப்ரல் ஜூன் மாதங்களில் இது மலரும். காலையில் இம்மலர்கள் மரத்தடியே உதிர்ந்து கிடக்கும். காய்கள் கடின மாய் இரு புறமும் பருத்து இருக்கும். நிழலுக்காக இம்மரங்களைப் சாலை களில் இரு புறங்களிலும் வளர்க்கி றார்கள்.



நம் நாட்டு முனிவர்கள் - 12

# அகிருதவிரணர்

பரசுராமருக்குப் பல சீடர்கள் இருந்தனர். அவரோடு இரவும் பகலும் இருந்து பணி புரிந்த உத்தமமான சீடர்தான் அகிருத விரணர்.

ஒருமுறை பரசுராமர் காட்டு வழியே சென்று கொண்டிருந்த போது ஒரு குகையிலிருந்து யாரோ அலறும் குரல் கேட்டு அவர் அங்கு சென்றார். அங்கு முனிவரின் மகன் ஒருவன் சுவரோடு ஒட்டி ஒரு ஓரத்தில் நிற்பதையும் அவன் மீது ஒரு புலி பாயத் தயாராகிக் கொண்டிருப்பதையும் அவர் கண்டார். உடனே அவர் ஒரு அம்பை எய்து அப்புலியை அடித்து வீழ்த்தினார்.

மறுவிநாடியே அப்புலியிலிருந்து ஒரு கந்தர்வன் வந்து பரசுராமரை வணங்கி ''ஐயா! நீங்கள் எனக்குக் கொடுக்கப்பட்ட சாபத்தைப் போக்கி விட்டீர்கள். மிக்க நன்றி'' என்று கூறி மறைந்து போனான். அந்த இளைஞன் பரசுராமரின் காலடிகளில் விழுந்தான். அவன் பரசுராமரின் தயவால் ஒரு காயம் கூட இல்லாமல் உயிர் தப்பியதால் அவனுக்கு அகிருத விரணர் என்ற பெயர் ஏற்பட்டது. பரசுராமர் அவனைத் தன் சீடனாக ஏற்று வேதங்களையும் அதன் உப அங்கங்களையும் அவனுக்குக் கற்பித்தார். அது மட்டுமில்லாமல் அஸ்திர, சஸ்திரப் பிரயோகங்களையும் அவனுக்கு அவர் சொல்லிக் கொடுத்தார்.

குருவம்சப் பிதாமகர் பீஷ்மர் கூட பரசுராமரிடம் போர்க் கலைகளைக் கற்றவரே. அவர் ஒரு முறை காசி மன்னன் நடத்திய சுயம் வரத்திற்குப் போய் தன் தம்பி விசித்திர வீரியன் மணக்க அரச குமாரிகளான அம்பை, அம்பிகை, அம்பாலிகை ஆகிய மூவரையும் தன் தேரில் ஏற்றிக் கொண்டு தன்னை வழி மறித்த அரச குமாரர்களை எல்லாம் வென்று ஹஸ்தினாபுரத்திற்குச் போய்ச் சேர்ந்தார்.

ஆனால் அரசகுமாரிகளில் அம்பைதான் சால்வ மன்னனை மணக்க விரும்புவதால் தன்னை அவனிடம் அனுப்பி விடும்படி பீஷ்மரிடம் கூறினாள். பீஷ்மரும் அவளை சால்வ மன்னனிடம் அனுப்பினார். ஆனால் சால்வ மன்னன் அவளை ஏற்க மறுத்துத் திருப்பி அனுப்பி விட்டான். அம்பையோ பீஷ்மரால்தான் தனக்கு இந்நிலை எனக் கூறி அவரே தன்னை மணக்க வேண்டும் என்றாள். பீஷ்மரோதான் பிரம்மாசாரியாக வாழ்நாள் முழுவதும் இருப்பதாக சபதம் செய்திருப்பதால் தான் அவளை மணக்க முடியாது என்று கூறிவிட்டார்.

பீஷ்மரைப் பழி வாங்க அம்பை பல அரசர்களிடம் உதவி கேட்டாள். ஆனால் பீஷ்மருக்கு பயந்து அவளுக்கு யாரும் உதவ முன் வரவில்லை. முடிவில் அவள் பரசுராமரிடம் போய் முறையிடவே, அவரும் அவளை அழைத்துக் கொண்டு பீஷ்மரிடம் போய் அவளை மணந்து கொள்ளும்படிக் கூறினார். பீஷ்மர் தன் சபதம் பற்றிக் கூறி மறுக்கவே பரசுராமர் கோபம் கொண்டு பீஷ்மரோடு சண்டை போட்டார்.

இருவரின் போர் வலுத்துப் பல நாட்கள் நடந்தும் முடியவே இல்லை. அப்போது நாரதரும், தேவர்களும் தலையிட்டு அவர்களது போரை நிறுத்தினார்கள். யாருக்கும் வெற்றியும் இல்லை தோல்வியும் இல்லை.

இப்படிப்பட்ட பரசுராமரின் ஆசிகள் பெற்று அகிருதவிருணர் நாளடைவில் உத்தமமான முனிவர் என்று பெயர் பெற்றார்.



# உங்களுக்குத் தெரியுமா?

1. 'சாக்கடலி'ன் ஆழம் என்ன?
2. ஒலிம்பிக் கொடியில் ஐந்து வளையங்கள் வெவ்வேறு நிறங்களில் உள்ளன. அந்நிறங்களை ஏன் தேர்ந்தெடுத்தார்கள்?
3. செடிகள் வளர்வதை அளக்க ஒரு யந்திரத்தை ஒரு இந்தியர் கண்டு பிடித்தார். அவர் யார்?
4. 1906ல் நோபல் பரிசு பெற்ற விஞ்ஞானியின் எட்டு சீடர்களும் பிறகு நோபல் பரிசுகள் பெற்றனர். அந்தப் பிரபல விஞ்ஞானி யார்?
5. மன்னன் பார்வையற்றவன் என்றதால் அவன் மனைவியான ராணியும் தானும் எதையும் பார்க்கக் கூடாது என்று தன் கண்களைத் துணியால் கட்டிக் கொண்டாள். அந்த ராணி யார்?
6. தேசபந்து, தீனபந்து என யார் யாரைக் குறிப்பிடுகிறார்கள்?
7. ரோமனியர் ஆந்தையை அபசகுனமாகக் கருதுகிறார்கள். அவர்கள் ஈக்களை எப்படிக் கருதுகிறார்கள்?
8. நம் தேசீயக் கொடியின் மூவர்ணத்திற்கு மூல காரணமானவர் மேடம் காமா. அமெரிக்கக் கொடியை உருவாக்கிய பெண்மணி யார்?
9. புலியை நம் தேசீய மிருகமாக எப்போது அறிவித்தார்கள்?
10. பறக்கும் தட்டுக்களை முதன் முதலில் எப்போது பார்த்தார்களாம்?
11. இத்தாலியின் முதலாவது பெண் டாக்டர் மற்றொரு துறையில் ஈடுபட்டார். அவர் பெயர் என்ன?
12. ஜவாஹர்லால் நேரு எந்த சிறையில் இருந்த போது 'டிஸ்கவரி ஆஃப் இண்டியா'வை எழுதினார்?
13. 'சீனமக்கள் குடியரசை' மாஸேதுங் எப்போது பிரகடனம் செய்தார்?
14. 'டெம்பிள் ஆஃப் ஹெவன்' எங்குள்ளது?
15. அக்பரின் வருமானத்துறை அமைச்சர் யார்?

## விடைகள்

1. 395.9 மீட்டர்
2. நீலம், மஞ்சள் பச்சை இலைப் பச்சை, சிவப்பு, கருப்பு, ஆகிய நிறங்கள் அநேகமாக எல்லா நாட்டுக் கொடிகளில் உள்ளன என்பதால்
3. ஜகதீஷ் சந்திரபோஸ்
4. ஜே.ஜே. தாம்ஸன்
5. திருதராஷ்டிரனின் மனைவி காந்தாரி
6. தேச பந்து சித்தரஞ்சன் தாஸ் தீனபந்து சி. எஃப் ஆண்ட்ரூஸ்
7. அதிர்ஷ்டத்தின் சின்னமாக
8. பிலடெல்பியாவைச் சேர்ந்த பெட்ஸிராஸ்
9. 1972 நவம்பரில்
10. 1947 ஜூன் 24
11. மெரியா மாண்டிஸரி கல்வித் துறை
12. அகம்மது நகர் கோட்டை
13. 1941 செப்டம்பர் 21
14. சைனாவின் பீஜிங்கில்
15. ராஜா தோடர்மல்

# பொன்மயமான பொழுதுகள் நெ. 2. விடைகள்

1. ஆங்கோர்: இந் நகரை விஜய வர்மனும் அவனது சந்ததியாரும் நிர்மாணித்தார்கள். அது 300 ஆண்டுகள் சிறப்போடு விளங்கிய பிறகு அதனை மன்னனும் மக்களும் விட்டுப் போனதால் அதனைச் சுற்றி மரங்களும் செடிகளும் முளைத்துக் காடா கியதால் அது 500 ஆண்டுகள் வரை உல கிற்குத் தெரியாமலே இருந்து வந்தது. ஹென்றி மௌஹட் அதனைக் கண்டபிறகே அதைப் பற்றிய விவரங்களை தெரிந்தன. இந்தப் படத்தில் விக்கிரகத்தின் கருடனின் உருவம் உள்ளது.



2. எங்கும் இல்லை! டோடா இரு நூறு ஆண்டு களுக்கு முன்பே அடியோடு அழிந்து போயிற்று



3. இதில் கொடுக்கப்பட்ட எண் வரிசை ஒற்றைப் படையில் 1 முதல் ஆரம்பித்து முகம் பார்க்கும் கண்ணாடியில் பார்க்கும் நிலை.

4. தமாஷா: ஒரு பாட்டும் நடனமும் கொண்டு மகாராஷ்டிரத்தில் பிர பலமாக உள்ளது.

5. மீன்! அந்தமான் வாசிகள் மீன் களை வில் அம்புகளைக் கொண்டு வேட்டையாடுகிறார்கள்.

6. கற்சிலை ஒரு மணி நேரத்திற்குப் பிறகும் நீர் மட்டத்திற்கு மேலேயே இருக்கும். நீர் மட்டம் ஏற ஏற படகும் உயர்ந்து கொண்டே போகும்.








# நானே சமைக்கிறேன்!

வண்டலூர் வைத்தியலிங்கம் பெயர் பெற்ற சமையல்காரர். கல்யாணம் கார்த்திகைகளுக்கு அந்த வட்டாரத்தில் அவரைத்தான் எல்லோரும் சமையலுக்குக் கூப்பிட்டனர். மனைவியை இழந்த அவர் தன் ஐந்து வயது மகள் ராதாவை தாம் சமையல் செய்யப் போகும் இடங்களுக்கு எல்லாம் அழைத்துச் செல்வது வழக்கம். அதனால் அவர்கள் சாப்பாட்டிற்கு எவ்விதக் குறைவும் இல்லாமல் இருந்தது. வேலைக்குப் போகாத நாட்களில் மட்டும் அவர் தன் வீட்டில் சமையல் செய்வார். ராதா அவர் சமையல் செய்வதைப் பார்த்துக் கொண்டே இருப்பாளேயொழிய ஒருநாளும் உதவுவதும் இல்லை.

வைத்தியலிங்கத்தின் தங்கையின் மகன் கோபுவும் தன் தாய் தந்தையரை இழந்து தன் மாமாவின் ஆதரவில் இருந்து வந்தான். தாய் தந்தையற்ற அவனை அவர் அவன் மீது இரக்கப்பட்டு வளர்த்தாலும் அவன் வளர்ந்து பெரியவனானதும் தன் மகள் ராதாவை அவனுக்கு மணம் செய்து வைக்க அவர் எண்ணி இருந்தார். கோபுவும் சமையல் வேலையில் தன் மாமாவுக்கு உதவ அவருடன் சென்று வந்தான். அவனுக்கும் அவர் சமையல் வேலையைக் கற்றுக் கொடுத்தும் வந்தார்.

வைத்தியலிங்கம் தன் மகள் ராதாவை மருமகன் கோபுவுக்குக் கல்யாணம் செய்து வைக்க எண்ணியதை கோபுவிடம் கூறவே அதற்கு அவனும் தன் சம்மதத்தைத் தெரிவித்தான். அதனால் வைத்தியலிங்கம் விரைவிலேயே அவர்களது திருமணத்தையும் நடத்தி விட்டார்.

இதற்குப் பிறகு வைத்தியலிங்கம் சில நாட்களில் இறந்து போனார். அதன் பிறகு அந்த வட்டாரத்து மக்கள் தம் வீட்டு விசேஷங்களில் சமையலுக்கு கோபுவைத்தான் அழைத்தார்

—கி. அருணா—



கள். வேலைக்குப் போகாத நாட்களில் அவனும் வைத்தியலிங்கத்தைப் போலவே வீட்டிலேயே சமையல் செய்து வைத்து வரலானான். வழக்கம் போல உதவி செய்ய முன் வராமலும் ராதா ஒரு வேலையும் செய்யாமலும் சாப்பிட்டு வந்தாள்.

அவள் அப்படி சாப்பிட்டதோடு நில்லாமல் கோபுவின் சமையலில் குற்றம் குறை சொல்லிக் கொண்டே இருந்தாள். உப்பு குறைவு, காரம் அதிகம் என்றும் அரைத்த மாவை மேலும் கொஞ்சம் அரைத்திருந்தால் இட்டிலியும் தோசையும் நன்றாக இருந்திருக்கும் என்றும் குறை கூற லானாள். உப்புமாவிற்கு எண்ணெய் போதாது என்றும் தாளிக்கப்பட்ட கடுகும் உளுத்தம் பருப்பும் தீய்ந்து விட்டது என்றும் குறை கூறலானாள்.

இப்படியாக அவள் அவன் சமைய லில் குற்றம் குறை கண்டு வந்தாளே யொழிய ஒருநாள் கூட அடுப்பின் பக்கம் போனதே இல்லை.

கோபுவுக்கு இது எரிச்சலாக இருந் தது. தான் சமைத்து வைத்ததை நன்றா கச் சாப்பிட்டு விட்டு குற்றம் சொல் கிறாளே என்று கோபு எண்ணி ராதா மீது கோபம் கொண்டான். ஒருமுறை கோபுவின் பிறந்தநாள் வந்தது. அன்று அவனுக்கு எங்கும் சமையல் வேலை யும் இருக்கவில்லை. அன்றாவது ராதா சமையல் செய்வாளென்று கோபு எதிர்பார்த்தான். ஆனால் அவளோ காலை எட்டு மணிக்குத்தான் எழுந் தாள். அன்றும் கோபு சமையலைச் செய்தான்.

ராதா வழக்கம் போலச் சாப்பிட உட்கார்ந்து அவன் செய்த சமைய லில் குறை சொல்லலானாள். பாயசத் தில் இன்னும் கொஞ்சம் வெல்லம் போட்டிருக்கலாம், ரசத்தில் இன் னொரு மூடி எலுமிச்சம் பழம் பிழிந் திருக்கலாம் என்று சொல்லவே, அவளோடு சாப்பிட உட்கார்ந்த கோபு கோபமடைந்து சட்டென எழுந்தான்.

அவன் அவளைப் பார்த்து ''உனக்கு இன்னமும் பேய்க் குணம் போகவில்லையா? போதும் போதும் என்று பொறுத்தால் தலைக்கு மேல் போகிறாயே. இனிமேல் உனக்கு நான் சமைத்துப் போட மாட்டேன். இங்கே பிசாசு போல உள்ள உனக்கு நான் சமைப்பதை விடக் காட்டிற்குப் போய் பிசாசுகளுக்குச் சமைத்துப் போடுவது மேல்'' என்று கூறி கோபமாகக் கூறி விட்டு வீட்டை விட்டு வெளியேறி னான்.

ஒருநாளும் கோபு ராதாவை இப்படிக் கோபித்துக் கொண்டதில்லை, அவன் வீட்டை விட்டுப் போவது கண்டு அவளும் எழுந்து வாசல் வரை வந்தாள். ஆனால் அதற்குள் கோபு தெரு முனையைக் கடந்து போய்விட்டான். அதைக் கண்டு அவள் திகைத்து நின்றாள்.

வீட்டை விட்டு வெளியேறிய கோபு சற்று நேரத்தில் காட்டை அடைந்தான். அவன் காட்டிற்குள் மெதுவாக நடந்து சென்று கொண்டிருந்த போது ஏதோ 'கீச்சுக் கீச்' என்ற சத்தம் வரவே குரங்குகள் தான் அவ்வாறு கத்துகின்றனவோ என்று எண்ணி அவன் திரும்பிப் பார்த்தான். இரண்டு குட்டிப் பிசாசுகள் அவன் பின்னால் வந்து கொண்டிருந்தன. அவை ''எங்களுக்கு சமையல் செய்து வைக்க வந்த சமையல்காரரே! வருக!! வருக!!'' என்று கூறி வரவேற்றன.

கோபு தைரியசாலி. அதனால் பிசாசுகளைக் கண்டு அவன் பயந்து விடவில்லை அவன் ''நானொன்றும் உங்களுக்கு சமையல் செய்து வைக்க வரவில்லை. அது சரி, நான் ஒரு சமையல்காரன் என்று உங்களுக்கு எப்படித் தெரிந்தது?'' என்று கேட்டான்.

அவை சிரித்துக் கொண்டே ''அது தான் எங்கள் சாமர்த்தியம். இன்றிரவு எங்கள் தலைவரின் மகளுக்கு விவாகம் நடக்கப் போகிறது. அதற்கு நாங்கள் வழக்கமாக உண்ணும் உணவு தயாரிக்கப்படாமல் இம்முறை சமையல் வித்தியாசமானதாக இருக்க வேண்டும் என எம் தலைவர் நினைப்பதால் உன்னை நாங்கள் அவரிடம்



அழைத்துச் செல்லப் போகிறோம்'' என்றன.

அதன்படியே அவை அவனை அழைத்துக்கொண்டு போய் தம் தலைவனின் முன் நிறுத்தன. அவை தம் தலைவரிடம் ''இவர் இந்த வட்டாரத்தில் புகழ் பெற்ற சமையல்காரர் கோபு'' என்றன. அத்தலைவனும் ''சமையல்காரரே! இந்தக் கல்யாணத்திற்கு நீதான் முழு சமையலைச் செய்ய வேண்டும். என் சம்மந்திக்கு உன் சமையல் பிடித்துப் போய் விட்டால் உனக்கு நிறையப் பணம் கொடுக்கிறேன்'' என்றது.

கோபுவும் ''பணம் கிடக்கட்டும். முதலில் சமையலுக்கு வேண்டிய பெரிய பாத்திரங்கள் இருக்கின்றனவா என்று தெரிய வேண்டும்'' என்று கேட்டான். பிசாசுத் தலைவனோ ''நீ எவ்



வளவு பெரிய பாத்திரம் கேட்டாலும் அது உடனே கிடைக்கும். ஆனால் நீ அதிரசமும உளுந்து வடையும் மிகச் சிறந்த முறையில் செய்ய வேண்டும். வடை ஒவ்வொன்றும் ஒருமுறம் அள விற்கு கர கரவென்று இருக்க வேண் டும். அதிரசமும் அதே அளவிற்குச் சுத்தமான நெய்யில் செய்யப்பட வேண்டும். அவற்றைச்சாப்பிட்டவர் கள் அவை போல அதற்கு முன் எங் குமே பார்த்ததும் இல்லை, சாப்பிட்ட தும் இல்லை என்றும் கூற வேண்டும். தெரிந்ததா'' என்றான்.

கோபுவுக்கு அதை எல்லாம் கேட் கத் தலையே சுற்றியது. ஆனாலும் பிசாசுகளிடம் அகப்பட்டுக் கொண் டாகி விட்டது. அவை ஆட்டி வைக் கிறபடி ஆடித்தானே ஆக வேண்டும். வடையும் அதிரசமும் அதுவரை அவன் செய்திராத அளவில் மிகப் பெரிதாக இருக்க வேண்டும். வடைக் குப் ஆளுயர அண்டாவில் உளுந்தை ஊற வைக்கச் சொன்னான். அதிரசத் திற்கு மாவையும் வெல்லப் பாகையும் தயாரிக்கலானான். ஒரு வழியாக வடைகளையும் அதிரசங்களையும் தயாரித்து எடுத்து வைத்து அவன் ஓரிடத்தில் படுத்தான். அவனை அறி யாமலேயே அவனுக்குத் தூக்கம் வந்து விட்டது.

கல்யாணத்திற்குப் பிசாசுகள் வந்து சேரலாயின. அவை செய்த ஆர்ப்பாட் டத்தில் கோபுவின் தூக்கம் கலைந்து விட்டது. மணமகப் பிசாசு அதிரசத் தின் வாசனையைக் கண்டு அதில் ஒன்றை எடுத்துத் தின்று பார்த்தது. மிக நன்றாக இருக்கிறதே என்று கூறி அது ஒரு வடையை எடுத்து விண்டு சாப்பிட்டது. பிறகு அது தன் மாமனார் பிசாசிடம்'' இவற்றைச்செய்தது யார்? மிகவும் நன்றாக இருக்கிறதே. எனக்கு நீங்கள் வேறு எதுவும் கொடுக்க வேண் டாம். இவற்றைச் செய்த சமையல் காரரை உங்கள் பெண்ணோடு எனக்கு சீர்தனமாகக் கொடுத்து விடுங்கள்'' என்று சந்தோஷப்பட்டுக் கூறியது.

மாமனார் பிசாசும் ''அதோ அந்த சமையல்காரன்தான் இவற்றைச் செய் தது. அவனை என் பெண்ணோடு உங்கள் வீட்டிற்கு அனுப்பி வைக் கிறேன்'' என்றது. அதைக் கேட்டுக் கொண்டிருந்த கோபு திடுக்கிட்டான். இதென்ன புதிய சிக்கல் என்று யோசிக் கலானான்.

அப்போது அவனுக்கு ஒரு வழி தெரிந்தது. பல கல்யாணங்களிலும் கோவில்களிலும் அவன் கதாகாலட்

சேபங்களைக் கேட்ட போது அதைக் கூறிய புராணிகர்கள் எல்லாம் அனுமாரின் மகிமையையும் அவரது பெயரைச் சொன்னாலே பிசாசுகள் ஓடிவிடும் என்றும் கூறக் கேட்டிருந்தான். அதனால் அவன் உடனே அனுமாரின் இன்னொரு பெயரான 'ஆஞ்சனேயா' ஆஞ்சனேயா'' என்று கண்களை மூடிக் கொண்டு உரக்கச் சொல்லலானான். அவன் அப்பெயரை ஆயிரம் தடவை கூறிய பின் கண் விழித்துப் பார்த்தான். அங்கு அப்போது ஒரு பிசாசுக் கூட இருக்க வில்லை. அவன் சமையல் செய்து வைத்திருந்தவை கூட பிசாசுகளோடு மாயமாய் மறைந்து விட்டன.

கோபு மகிழ்ந்து போய் 'ஆஞ்சனேயா' 'ஆஞ்சனேயா' என்று உச்சரித்தவாறே அக்காட்டிலிருந்து கிளம்பித் தன் வீட்டிற்குப் போய்ச் சேர்ந்தான். அப்போது தலை குனிந்தவாறே ராதா வீட்டிலிருந்து எங்கோ கிளம்புவதைக் கண்டான். அவன் அவளிடம் ''எங்கே கிளம்பி விட்டாய்?'' என்று கேட்டான்.

தலை நிமிர்ந்து பார்த்த ராதா ஆச்சரியத்தோடு ''ஓ! வந்து விட்டீர்களா? உங்களைத் தேடிக் கொண்டுதான் கிளம்பினேன். நீங்கள் எனக்குச் சமைத்துப போடுவதற்கு பதிலாக காட்டிலுள்ள பிசாசுகளுக்குச் சமைத்துப் போடுவதே மேல் என்று கூறி விட்டுப் போனீர்களே. அதனால் அங்கு போய்த் தேடிக் கண்டு பிடித்து அழைத்து வரலாம் என்றுதான் கிளம்பினேன்'' என்று படபடவென்று கூறினாள்.

அதைக் கேட்ட கோபு பெருமூச்சு விட்டவாறே ''இப்போது அந்தப் பிசாசுகளுக்குச் சமைத்துப் போடுவதை விட உனக்குச்சமைத்துப்போடுவதே மேல் என்று உணர்ந்து திரும்பி வந்து விட்டேன்'' என்று சொல்லி காட்டில் தானடைந்த அனுபவத்தை விவரித்துக் கூறினான்.

அதைக் கேட்ட ராதா ''எனக்கு புத்தி வந்தது, இனிமேல் நீங்கள் ஒன்றும் நம் வீட்டில் சமையல் செய்ய வேண்டாம். அதை நான் செய்கிறேன். நீங்கள் வெளி இடங்களில் மட்டும் சமையல் செய்யப் போய் வாருங்கள்'' என்றாள்.

கோபுவும் அதைக் கேட்டு மகிழ்ந்து போனான்.



# அண்ணாமலையின் அபார மூளை!

அண்ணாமலை கோட்டகிரியிலிருந்து வீரகிரிக்குப் போய்க் கொண்டிருந்தான். நடு வழியில் அடர்ந்த காடு ஒன்று இருந்தது. அதில் திருடர் பயம் இருந்தது. அதனால் அவன் தன் கையில் குண்டாந்தபடி ஒன்றை எடுத்துக் கொண்டு சென்றான். அவன் நடுக் காட்டை அடைந்த போது நான்கு முரட்டுத் திருடர்கள் அவனை வழி மறித்தார்கள.

அண்ணாமலை சற்றும பயப்படாமல் அவர்களை எதிர்த்தான். சண்டை பயங்கரமாக நடந்தது. அண்ணாமலைக்கும் சில காயங்களும் திருடர்களின் உடல்களில் காயங்களும் ஏற்பட்டன. கடைசியில் திருடர்கள் அவனைப் பிடித்து மரத்தில் கட்டிவிட்டு அவன் இடுப்பி லிருந்த பணப்பையை எடுத்துப் பார்த்தார்கள். அதில் நான்கு செப்புக் காசுகளே இருந்தன.

அப்போது ஒரு திருடன் ''பூ! இந்தப் பிச்சைக் காசுக்காகத்தான் எங்களுடன் இவ்வளவு பயங்கரமாகச் சண்டை போட்டாயா?'' என்று கேட்டான். அண்ணாமலையும் ''உங்களுக் கெல்லாம் மூளை கொஞ்சமாவது இருக்கிறதா? யாராவது இந்த அற்பக் காசுகளுக்காக சண்டைபோடுவார்களா? நான் என் முண்டாசின் முனையில் முடிந்து வைத்திருக்கும் ஆயிரம் ரூபாய்களைச் காப்பாற்றிச் கொள்ளத்தான் சண்டை போட்டேன்'' என்றான் பெருமை பொங்க.

திருடர்கள் உடனே அவன் தலையிலிருந்த முண்டாசை எடுத்து அதிலிருந்த ஆயிரம் ரூபாயை எடுத்துக் கொண்டு போய் விட்டார்கள்.





# நல்லது செய்தால்...!

மூத்தூர் என்ற ஊரில் முத்துசாமி என்ற பணக்காரன் இருந்தான். அவனுக்குக் கல்யாணமாகிப் பல வருடங்களாகியும் ஒரு குழந்தை கூடப் பிறக்கவில்லை. பல கோவில் களுக்குப் போய் வேண்டியும் பலன் இல்லை. அவன் என்ன செய்வதென்று திகைத்துக் கொண்டிருக்கையில் அந்த ஊருக்கு ஒரு யோகி வந்தார்.

அந்த யோகி ஒரு ஊரில் மூன்று நாட்களுக்கு மேல் தங்குவது இல்லை. தன்னைக் காண வருபவர்களுக்கு ஏதாவது ஒரு பிரசாதம் கொடுத்து அனுப்புவார். அந்த யோகியை முத்துசாமி தரிசித்துத் தன் மனக் குறையைக் கூறினான். அவர் கையில் அப்போது பால் இருந்தது. அவர் அதில் கொஞ்சத்தை ஒரு தொன்னையில் ஊற்றிக் கொடுத்து "இதை உன் மனைவியை ஒரே மடக்கில் குடிக்கச் சொல் அவளுக்குக் கண்டிப்பாகக் குழந்தை பிறக்கும்" என்றார்.

முத்துசாமியும் அந்தப் பாலை எடுத்துக் கொண்டு போய்த் தன் மனைவியிடம் கொடுத்துக் குடிக்கச் சொன்னான். ஆனால் அவள் அந்தப் பாலை இரண்டு முறைகளில் உள்ளங் கையில் விட்டு உறிஞ்சிக் குடித்தாள். இதற்குப் பிறகு அவள் கர்ப்பமுற்று உரிய காலத்தில் இரு பெண் குழந்தைகளைப் பெற்றெடுத்தாள். குழந்தைகள் மிக அழகாக இருந்த போதிலும் அவர்களுக்கு ஒவ்வொரு கால் இல்லை. அவர்கள் வளர்ந்தாலும் அவர்களால் நடக்க முடியவில்லை.

முத்துசாமி பணத்தைத் தண்ணீராக இறைத்து அவர்களுக்கு வைத்தியம் செய்து பார்த்தான். அவர்களின் அந்தக் கால்கள் வளரவில்லை. அப்பெண்களும் வீட்டு வாசலைத் தாண்டிப் போகவில்லை. ஏனெனில் எல்லோரும் தம்மைப் பார்த்து கேலி செய்வார்களென்று அவர்கள் எண்ணினார்கள். முத்துசாமி அவர்களை மிகுந்த பாசத்

—பாலாஜி கிருஷ்ணன்—



யாருக்குக் கொடுப்பது நல்லது என்று நினைக்கிறாயோ அவருக்குக்கொடு. உன் விருப்பம் நிறைவேறும்'' என்று கூறி ஆசிர்வதித்தார்.

முத்துசாமி அதை தன் இரு புதல்வி களில் யாருக்குக் கொடுப்பது என்று கவலைப்பட்டவாறே தன் வீட்டிற் குச்சென்று கொண்டிருந்தான். அவன் தன் இரு புதல்விகளையும் ஒன்று போல் நேசித்ததால் ஒரு பெண்ணிற் குப் பழத்தைக் கொடுத்தால் அவளது கால் வளர்ந்து நடக்க ஆரம்பித்து விடுவாளே என்றும் அதைக் கண்டு மற்றவள் வருத்தப்படுவாளே என்று எண்ணி வேதனைப்படலானான்.

அவன் அப்போது நடுவழியில் யாரோ ஒருத்தி ஒரு கிணற்றருகே உட் கார்ந்து கண்ணீர் விட்டுக் கதறிக் கொண்டிருப்பதைக் கண்டான். அவளுக்கு ஒரு வாலிபன் ஏதோ ஆறு தல் கூறி அவளைத் தேற்ற முயன்று கொண்டிருந்தான். முத்துசாமி என்ன விஷயம் என்று அறிய அவர்களருகே போய் நிற்கவே அவனும் ''ஐயா! நீங்களாவது இவளுக்கு அறிவுரை கூறுங்கள் இவள் இந்தக் கிணற்றில் விழுந்து சாகப் போவதாகக் கூறு கிறாள்'' என்று பரிதாபக் குரலில் கூறி னான்.

முத்துசாமியும் அவனிடம் ''என்ன விஷயம் என்பதை முதலில் விவர மாகச் சொல்'' என்று கேட்டான். அவனும் ''இவளுக்குச் சிறு வய திலேயே பக்கவாத நோய் கண்டு இவளது இடது கையும் இடது காலும் விளங்காமல் போய் விட் டன. இவளை யாரும் மணந்து கொள்ள முன் வரவில்லை. நான்

துடன் வளர்த்து வந்தான்.

பனிரெண்டு ஆண்டுகள் கழிந்த பிறகே முன்பு முத்தூருக்கு வந்த யோகி மறுபடியும் வந்தார். அப் போது முத்துசாமி அவரைக் கண்டு ''சுவாமி! தங்களது தயவால் எனக்கு இரண்டு பெண் குழந்தை கள் பிறந் துள்ளன. ஆனால் அவர்கள் ஒவ்வொ ருவருக்கும் ஒரு கால் இல்லை. அவர் களது எதிர்காலத்தை எண்ணித்தான் கலங்குகிறேன். அவர்களது கால்கள் வளர்ந்து நன்கு நடக்க நீங்கள் அருள் புரிய வேண்டும்'' என்று வேண்டி னான்.

அப்போது அவர் கையில் ஒரு வாழைப் பழம் இருந்தது. அதை உரித்து அதில் கொஞ்சம் விண்டு அவர் சாப்பிட்டு விட்டு மீதப் பழத்தை முத்துசாமியிடம் கொடுத்து ''இதை

இவளைப் பார்த்து இரக்கப்பட்டு மணந்து கொண்டேன். நான் பணக்காரனும் அல்ல. நான்தான் இவளது எல்லா வேலைகளையும் செய்து கொடுத்துக்கொண்டிருக்கிறேன். தன் கணவன் இப்படிச்சிரமப்படுகிறானே என்று எண்ணிதான் இறந்து விட்டால் அவன் வேறொரு பெண்ணை மணந்து கொண்டு சுகப்படட்டும் என இவள் நினைக்கிறாள். அதனால் இந்தத் தற்கொலை முயற்சியில் இறங்கி இருக்கிறாள். நான் இவளை விரும்பி மணந்தவன். இவள் இறந்தால் நானும் இவளோடு சேர்ந்தே இறப்பேன். இதை அவள் மனதில் படும்படிக் கூறுங்கள்'' என்றான்.

முத்துசாமி அவர்களது பிரச்னையைத்தீர்க்க யோகி கொடுத்த வாழைப் பழத்தை அந்தப் பெண்ணுக்குக் கொடுத்து விடத் தீர்மானித்தான். ஏனெனில் தன் இரு புதல்விகளில் ஒருத்திக்குக் கொடுத்து அவள் மகிழ்ந்திருக்க, மற்றவள் அதைக் கண்டு வேதனைப்படுவதை அவன் கண்டு மனம் வருந்துவதை விட இந்தப் பெண்ணைக் காப்பாற்றி அத் தம்பதிகளை மகிழச் செய்வது மேல் என எண்ணினான். எனவே அவன் அதனை அப்பெண்ணிடம் கொடுத்து ''முதலில் நீ இந்தப் பழத்தைச் சாப்பிடு. பிறகு நான் சொல்ல வேண்டியதைச் சொல்கிறேன்'' என்றான்.

அவளும் அந்தப் பழத்தை வாங்கிச் சாப்பிட்டாள். அப்போது அவள் தன்னுள் ஏதோ ஒரு மாறுதல் ஏற்படுவதை உணர்ந்தாள். அவள் எழுந்து நின்று இரு கைகளையும் கூப்பி முத்துசாமியை வணங்கினாள். அது கண்டு அந்த வாலிபன் ஆச்சரியத்தால் கூவினான்.

முத்துசாமியும் ''இவளது கைகால் செயல்படுகின்றன. உங்கள் பிரச்னை தீர்ந்தது'' என்று கூறி வாழ்த்தி அவர்களை அனுப்பிவிட்டுத்தன் வீட்டிற்கு வந்தான். அப்போது அவனது இரு புதல்விகளும் ஓடி வந்து அவனை வரவேற்று வீட்டினுள் அழைத்துச் சென்றார்கள்.

அப்போது அவன் மனம் ''நான் அந்த இளம் தம்பதிகளுக்கு நன்மை செய்தேன். அதன் பலனாக ஆண்டவன் என் புதல்விகளுக்குக் கால்களைச் செயல்படச்செய்தார்'' என்று எண்ணி அவருக்கு நன்றி செலுத்தினான்.



# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ.100

இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1996 அக்டோபர் மாத இதழில் வெளியிடப்படும்.



MAHANTESH C. MORABAD



MAHANTESH C. MORABAD

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ ஆகஸ்டு 20-ம் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ.100/- பரிசு, இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி', சென்னை-600 026.**

## ஜுன் மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ : **கை கொடுக்கும் தெய்வம்.**

இரண்டாவது போட்டோ : **கை கொடுக்கும் தொழில்.**

பரிசு பெற்றவர் : **திரு கு. கணேஷ், விருத்தாசலம்.**




Printed by B.V. REDDI at Prasad Process private Ltd., 188, N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India), Controlling Editor: NAGI REDDI.

